# கல்கி

KALKI 6.6.93 ரூ. 3.00



# நீதிபதி ராமசாமியை வீட்டுக்கு அனுப்பியவர்!

நீதிபதி ராமசாமி மீது, பாராளுமன்றத்தில் கண்டனத் தீர்மானம் கொண்டு வந்ததன் மூலம், நாட்டு மக்களின் கவனத்தைக் கவர்ந்தவர் சோமநாத் சாட்டர்ஜி. பார்வைக்கு எளிய தோற்றம் கொண்ட இந்த மேற்கு வங்காளத் துக்காரர், பாராளுமன்றத்தில், மார்க்ஸிஸ்ட் கட்சி எம்.பிக்களின் தலைவர்.

ஆறுமுறை பாராளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் சோம்நாத் சாட்டர்ஜி. வக்கீல் தொழில் மூலம் இவரால் லட்சக் கணக்கில் சம்பாதிக்க முடியும். ஆனாலும் இவர் எடுத்துக் கொள்ளுகிற கேஸ்களில் பெரும்பாலானவை தொழிற் சங்கங்களின் கேஸ்கள் தான். மே. வங்க அரசு சார்பாக சுப்ரீம் கோர்ட்டில் அவ்வப்போது ஆஜராகிறார்.

சோம்நாத் சாட்டர்ஜியின் அப்பா நிர்மல் சாட்டர்ஜி, கல்கத்தா உயர் நீதிமன்றத்தில் நீதிபதியாக இருந்தவர். இவரது குடும்பம், 'ஜனசங்'கின் ஸ்தாபகரான சியாமா பிரசாத் முகர்ஜியின் குடும்பத்துக்கு மிகவும் நெருக்கம். சியாமா பிரசாத் முகர்ஜி குடும்பந்தான் சோம்நாத் சாட்டர்ஜி லண்டன் சென்று, கேம்பிரிட்ஜில் சட்டம் படிக்க ஏற்பாடு செய்தது.

மார்க்ஸிஸ்ட் கட்சியின் மூத்த தலைவர்களின் ஆலோசனையை ஏற்று, 1971 - ல் லோக்சாபாவுக்குப் போட்டியிட்டுக் காங்கிரஸ் வேட்பாளரைக் கணிசமான வோட்டு வித்தியாசத்தில் தோற்கடித்தார் சோம்நாத். அடுத்த இரண்டு தேர்தல் களிலும் வாக்கு வித்தியாசம் மேலும் அதிகரித்தது.

ஆயினும் பிறகு மம்தா பானர்ஜியிடம் தோற்றுப்போனார். "இதற்குக் காரணம் இந்திரா மரணத்தால் ஏற்பட்ட அனுதாப அலை மட்டுமில்லை; என்னுடைய அதீத நம்பிக்கையும் கூட," என்கிறார் சோம்நாத். அந்தத் தேர்தலின் போது மம்தா கிளப்பி விட்ட புரளிகள் பல. அவற்றுள் ஒன்று, தாம் சோம்நாத் சாட்டர்ஜியின் உறவுக்காரப் பெண் என்றும், தேர்தல் பிரசாரத்தின் போது, ஆசி கோரியும், தமக்கு வாக்களிக்கும்படி கேட்டும் சோம்நாத் சாட்டர்ஜி வீட்டுக்குப் போனபோது, ஒரு பெண் என்றும் பாராமல் தம்மீது ஆறு அல்சேஷன் நாய்களை சோம்நாத் ஏவி விட்டார் என்பது.

இது பற்றிக் கேட்டால், "என் வீட்டில் நாய்க் குட்டி கூடக் கிடையாது! அப்புறம் அல்சேஷன்கள் எப்படி வரும்?" என்கிறார் சோம்நாத். மம்தாவுக்கும் சாட்டர்ஜி குடும்பத்துக்கும்



எந்தவித சொந்த பந்தமும் இல்லையாம்.

ஜோதிபாசுவுக்குப் பின் மே. வங்காள முதல்வர் சோம்நாத் சாட்டர்ஜி தான் என்று ஒரு வதந்தி. "இதற்கு சோம்நாத் சாட்டர்ஜியின் பளிச் பதில்: "இது சி.பி.எம்.; காங்கிரஸ் கட்சி இல்லை!"

- எஸ். சந்திரமௌலி

கார்ட்டூன் நன்றி : டைம்ஸ் ஆஃப் இந்தியா

# பள்ளி திறக்கிறது; பணத்துக்கெங்கே போவது?

''குழந்தைக்கு நல்ல எஜுகேஷன்கிறது ஒவ்வொரு பெற்றோருடைய கனவாக இருக்கிறது. அது கிடைக்கணும்னா - அதற்கான விலை கொடுத்துத்தானே தீரணும்? அஃப்கோர்ஸ் அதிகம்னாலும், அவசியம்னு ஆன பிறகு வேற வழி?''

மலேரியா, ஃப்ளு போன்றவை தவிர, பரீட்சை ஜுரம், காதல் ஜுரம் எல்லாம் உண்டுதான். போதாக்குறைக்கு வருஷம் தவறாது சகல பெற்றோர்களையும் ஓர் உலுக்கு உலுக்கிச் செல்வது ஜுன் ஜுரம்!

பள்ளிகள் என்னும் அலிபாபா குகையிலிருந்து கல்வியென்னும் சொத்தைக் கவர்ந்து வரும் பொருட்டு, பணம் என்கிற மந்திரத்தை மூச்சு விடாமல் கூறி முழி பிதுங்கும் கார்ட்டூன் முகங்கள் பார்க்குமிடமெல்லாம் தெரிய ஆரம்பித்து விட்டன. எல்.கே.ஜி. அட்மிஷன் பற்றிய ஜோக்குகளில் பத்திரிகைகள் பிதுங்குகின்றன!



இன்றைய தேதியில் ஒரு மெடிக்கல் ஸீட் இரண்டு லட்சமும் ஒரு எல்கேஜி ஸீட் இரண்டாயிரமுமாக இருக்கின்றன! நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வரும் இந் நிலை - அடுத்த பத்து வருஷங்களில் எங்கு கொண்டு விடப் போகிறது என்று தெரியவில்லை!



★ இளங்கோவன்

நமது அரசின் மகத்தான இலவசக் கல்விக் கொள்கை எல்லாம் ஃபைல் அளவில் ரொம்ப சிறப்பாக நடைபெற்று வருகின்றன. அரசாங்கப் பள்ளிகள் முதற்கொண்டு நன்கொடை என்ற பெயரில் ஆயிரக் கணக்கில் பகல் கொள்ளை நடந்த படிக்கு இருக்கின்றன. தனியார் பள்ளிகள் பற்றிக் கேட்கவே வேண்டாம். அரசுப் பள்ளிகளுக்கும் ஏராள லஞ்சம் தந்த பிறகே ஆசிரியர் வேலை கிடைப்பதால் இவர்கள் ஏதேதோ காரணம் சொல்லிப் பணம் பிடுங்கத் தயங்குவதே இல்லை. மனச்சாட்சி தாராளமாகவே இதற்கு இடம் தருகிறது!

'கல்வி என்பது ஒரு புனிதமான சமாசாரமாக்கும்' என்பதெல்லாம் மலையேறி, இன்று அது ஒரு உன்னதமான பிஸினெஸ் ஆகி விட்டது மறுக்க முடியாத உண்மை.

பெற்றோர்கள் தம் மக்களின் நல்வாழ்வு கருதி எதையும் செய்யத் தயாராக இருப்பதாக சினிமா பாணியில் ஸ்டேட்மென்ட் விடுகிறார்கள். இதுதான் சாக்கு என்று கல்வி நிறுவனங்கள் கண்டபடி பாக்கெட்டைத் துழாவுகின்றன. மொத்தத்தில் கல்வியின் பெயரில் மகத்தான கொள்ளை - சமூக ஒப்புதலோடு, அரசு ஆசியோடு நடந்தபடி இருக்கிறது.

வசதியான குடும்பங்களுக்குப் பிரச்னை இல்லை. தங்கள் குழந்தைகளை ஏழாயிரம் நன்கொடை கொடுத்துக் கூட எல்கேஜியில் சேர்த்து விட முடியும்.



● நாடுகாக்கும் தலைவர்களாய் நாளை மலரப் போகிறவர்கள்

ஒன்றுமே இல்லாதவர்களுக்கும் பிரச்னை இல்லை. சத்துணவோடு பஞ்சாயத்துப் பள்ளிகளில் இடம்பிடிக்க முடிகிறது. (இப்போவெல்லாம் அங்கும் டப்பு காவாலா!)

எப்போதும் போல் பரிதாபத்திற்கு உரியவர்களாக மத்தியதர மகா ஜனங்களே முன்நிற்கிறார்கள்.

தமிழ் மீடியத்தில் படித்தால் தன் குழந்தை ஒரு டாக்டராகவோ, இஞ்ஜினியராகவோ ஆகி விட முடியாது என்கிற உறுதியான சித்தாந்தத்தை மனதில் கொண்டு, அவர்களும் 'யூ நோ' பள்ளிகளை நோக்கிப் படையெடுக்கிறார்கள். விளைவு, குறைந்தது ஐயாயிரம் முதல் பத்தாயிரம் வரை இல்லாமல் பள்ளிவாசம் இல்லை என்கிற நிலை! (தோராய செலவுப் பட்டியல் பெட்டிச் செய்தியாக உள்ளது.)

ஏன் இப்படி? இத்தனை செலவு - கல்விக்கு அவசியம்தானா? செய்கிற செலவுக்கேற்ற பலன் இருக்கிறதா?

கடந்த வருடம் தன் ஒரே மகளை வெற்றிகரமாக உள்ளூர் 'ஃபாரின்' ஸ்கூலில் எல்கேஜியில் சேர்த்து விட்டு இந்த வருஷ யூகேஜி தட்சணைக்கான ஏற்பாடுகளில் மும்முரமாக இருக்கும் திருமதி சாந்தி சொல்கிறார் :

''குழந்தைக்கு நல்ல எஜுகேஷன்கிறது ஒவ்வொரு பெற்றோருடைய கனவாக இருக்கிறது. அது கிடைக்கணும்னா - அதற்கான விலை கொடுத்துத்தானே தீரணும்? அஃப்கோர்ஸ் அதிகம்னாலும், அவசியம்னு ஆன பிறகு வேற வழி? கவர்ன்மென்ட் ஸ்கூல்ஸ் நல்லா இல்லைன்னு சொல்லலை. ஆனா பிரைவேட் ஸ்கூல்ஸ்ல கிடைக்கற கவனிப்பு அங்கு போதாதுன்னு தோணறது. பிரைவேட் ஸ்கூல்ல நிறைய ஹோம் ஒர்க் தர்றாங்க. சப்ஜெக்ட்ஸ் அதிகம். மூணாங் கிளாஸுக்கு கம்ப்யூட்டர் சயன்ஸ் இருக்கு! ஸ்ட்ரிக்ட்டா இருக்காங்க. சின்ன வயசுலேர்ந்தே குழந்தை ஒரு கட்டுதிட்டத்தோட, சில ஒழுக்கங்களோட வளருது. அஃப்கோர்ஸ் இதெல்லாம் கூடுதலான சுமைகள்தான் என்றாலும் இந்தக் காலத்துக்குத் தேவைதான்னு தோணறது.''

இப்படி நிலைமையை நியாயப்படுத்திக் கொள்கிறவர்கள் ஒரு பக்கம் இருக்க, திட்டிக் கொண்டேயாகிலும் செலவழிக்கிறவர்கள் இன்னொரு ஜாதி. சென்னை இங்கிலீஷ் எலக்ட்ரிகல் கம்பெனியில் பணி புரிந்து கொண்டே டெய்லர் கடையும் நடத்தி வரும் ஜானகிராமன் சொல்கிறார் :

''என்னங்க பண்றது? ஆயிரக்கணக்குல கொட்டிக் கொடுத்தாத்தான் ஸீட் கிடைக்குது. எனக்கு மூணு பொண்ணுங்க. கவர்ன்மெண்ட் ஸ்கூல்லதான் சேர்த்தேன். அட்மிஷன் போது ஒவ்வொருத்தருக்கும் ரெண்டாயிரத்துக்குக் குறையாமல் கொடுக்க வேண்டியிருந்தது. ரசீது கொடுத்து வாங்கிக்கறாங்க, சார்! யார் கேக்கறது இவங்களை? ஏதாவது கேட்டா பில்டிங் கட்ட, குழாய் வெக்கங்கறாங்க! நம்ம மாதிரி சாதாரண ஜனங்க என்ன பண்ண முடியும்? தனியார் ஸ்கூல்தான் அநியாய கொள்ளைன்னா, அதற்குக் கொஞ்சமும் குறையாம கவர்ன்மென்ட் ஸ்கூலிலேயும் வாங்கறாங்க. வருஷத்துக்கு ஆறாயிரம். ஏழாயிரம் 'சாலிடா' போயிடுதுங்க! என்ன பண்றது?''

● சந்தானமூர்த்தி ● ஜானகிராமன்



அரசுப் பள்ளிகளில் நன்கொடை வாங்குவதற்குச் சட்டத்தில் இடமிருக்கிறதா? அப்புறம் தனியார் பள்ளிக்கும் இதற்கும் என்ன வித்தியாசம்? இரண்டு வகையிலும் சாராத அரசு அங்கீகாரம் பெற்ற தனியார் பள்ளிகளில் நிலைமை எப்படி? ○

தாம்பரம் நேஷனல் மேநிலைப் பள்ளி தலைமை ஆசிரியர் டி.பி. இளங்கோவன் சொல்கிறார் :

''நன்கொடையைப் பள்ளி நேரடியாக வாங்குவது இல்லை. பெற்றோர் ஆசிரியர் சங்கத்தின் மூலமாக, முறையாக, கணக்கு வழக்குகளுடன் வாங்கப்படுவது. இது அரசுப் பள்ளி, அரசு சார்ந்த தனியார் பள்ளி நிறுவனங்கள் யாவற்றிற்கும் பொதுவானது. அரசாங்க அனுமதியின் பேரில்தான் (கல்வித் துறை இயக்குநரின் ஒப்புதலுடன்) வாங்குகிறோம். அதுவும் தமிழ் மீடியம் மாணவர்களுக்கு எந்தப் பள்ளியிலும் டொனேஷன் கேட்பதில்லை. அவர்களுக்கு வெறும் அட்மிஷன் ஃபீஸ்தான்! டொனேஷனெல்லாம் ஆங்கில மீடியம் மாணவர்களுக்குத்தான்!''

''அது ஏன்?''

''இதற்கு முழுக்க முழுக்க மக்களைத்தான் காரணம் சொல்வேன். யார் இப்போது விரும்பி, தமிழ் மீடியத்திற்கு வருகிறார்கள்? மக்கள் விருப்பம் முழுக்க இங்கிலீஷ் மீடியத்திற்குத்தான்! எக்கச்சக்கமாக, கட்டுப்படுத்த முடியாமல், கும்பல் அந்தப் பக்கம் சாய்ந்தால் தடுக்கவா முடியும்? கவர்ன்மெண்ட் பள்ளிகளில் சீட் இல்லை என்றெல்லாம் சொல்ல முடியாது. சொல்லக் கூடாது!

''எனவே கும்பல் அதிகமானால் அடிப்படைத் தேவைகள் பெருகுகிறது. கட்டடங்கள் உள்ளிட்ட பல்வேறு விஷயங்களின் தேவை அதிகமாகின்றன. அரசு அதெல்லாம் பற்றிக் கண்டுகொள்வதில்லை; கவலைப்படுவதில்லை. அதற்காக தொகை ஏதும் ஸ்பெஷலாக வழங்குவதில்லை. இந்த நிலையில் நாங்கள் என்ன செய்ய முடியும்? அதிகமாக ஜனம் குவியும் ஆங்கில மீடியம் அட்மிஷன்களிடம் பெற்றோர் - ஆசிரியர் சங்க (PTA) நன்கொடையாக ஒருமுறை வசூலிக்கிறோம். அதோடு சரி. அதன் மூலம் கிடைக்கும் பணத்தைக் கொண்டு கட்டடங்கள், குழாய்க் கிணறுகள், காம்பவுண்ட் வால், மேசை நாற்காலி இதர செலவுகளைச் சமாளிக்கிறோம்.

''இன்னொரு விஷயம். எங்களை மாதிரி அரசு சார்ந்த தனியார் பள்ளிகளில் அரசாங்கம் நியமிக்கும் ஆசிரியர்கள் போதுமானதாக இல்லை. எங்கள் பள்ளிக்கு அரசு 30 ஆசிரியர்களைத் தந்திருக்கிறது. கிட்டத்தட்ட மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்கள். எப்படிச் சமாளிப்பது? எனவே, அரசு நியமித்தவர்கள் தவிர, எங்கள் மேனேஜ்மெண்ட் கூடுதலாக 40 ஆசிரியர்களை நியமித்திருக்கிறது. அவர்களுக்கு யார் சம்பளம் தருவார்கள்? இதையெல்லாம் யோசிக்க வேண்டும். நீங்கள் கேட்கலாம், பணம் வாங்குவதில் உள்ள அக்கறை மாணவர் முன்னேற்றத்தில் இருக்கிறதா என்று. எங்கள் பள்ளியில் எப்போதும் ரிசல்ட் 98%க்குக் குறைவதே இல்லை!''

''எனவே நன்கொடை வாங்குவது தவிர்க்க முடியாதது என்கிறீர்களா?''

''கண்டிப்பாக. எங்கள் விஷயத்தில் கூட ஒரு பக்கம் தேவலை. ஆனால் CBSE, மெட்ரிகுலேஷன் பள்ளிகளுக்கு 'கிராண்ட்' ஏதும் கிடையாது. ஆனால் அவர்கள் ஸ்டாண்டர்ட் மட்டும் எப்போதும் உயர்வாகவே இருக்கிறது. வசதிகள் இல்லாமல் எப்படி வளர்ச்சி கிடைக்கும்? ஸோ, நன்கொடை என்பது இன்றைய நிலையில் தவிர்க்க முடியாதது!''

## செலவுக் கணக்கு

இப்போதெல்லாம் 'கல்யாணம் எப்படிப் பண்ணுவது?' என்று விலாவாரியான பட்டியல்களுடன் புத்தகங்கள் கிடைக்கிறது. அதே மாதிரி 'உங்கள் குழந்தையை நர்ஸரியில் சேர்ப்பது எப்படி?' என்று யாராவது போட்டிருக்கிறார்களா என்று தெரியவில்லை. எதற்கும் இருக்கட்டும் என்று ஒரு மினி, தோராய செலவுக் கணக்கு. (எல்கேஜிக்கு)

| | | |
|---|---|---|
| அட்மிஷன் ஃபீஸ் | - | 200.00 |
| டொனேஷன் | - | 1000.00 |
| யூனிஃபார்ம் | - | 750.00 |
| ஷூ, டை இன்னபிற | - | 200.00 |
| தொலைக்க, தொலைக்கப் புத்தகங்கள் | - | 250.00 |
| கிழிக்க, கிழிக்க நோட்டுகள் | - | 200.00 |
| உடைக்க, உடைக்க பேனா, பென்ஸில் | - | 50.00 |
| டிபன் பாக்ஸ், வாட்டர் பாட்டில் | - | 50.00 |
| வேன் (அ) பஸ் (அ) ரிக்ஷா (மாதத்திற்கு) | - | 150.00 |




தலை சுற்றுகிறது.

நீங்களே கூட்டிக் கொள்ளுங்கள்!

பள்ளிகளில் நன்கொடை வாங்குவதைக் 'கொள்ளை' என்றெல்லாம் சொல்வதை வன்மையாகக் கண்டிக்கிறவர் எஸ். சுந்தரமூர்த்தி. குரோம்பேட்டை பெண்கள் மேநிலைப் பள்ளியின் பெற்றோர் ஆசிரியர் கழகத் தலைவர்.

அவர் சொல்கிறார் : ''இந்த ஸ்கூலை எடுத்துக்குங்க சார்! (குரோம்பேட்டை பெண்கள் பள்ளி.) ஆரம்பிச்ச புதுசுல ஒரு பில்டிங் கிடையாது. வெறும் கொட்டகை! அதுலயும் மழை வந்தா உட்கார முடியாது. சிமெண்ட் தரை கிடையாது. வெறும் மண்தான்! எத்தனை வருஷம் அப்படியே இருந்தது! என்ன பண்ணினாங்க, கவர்மெண்ட்ல? நாங்க பி.டி.ஏல டொனேஷன் கலெக்ட் பண்ண ஆரம்பிக்க இப்ப 22 வகுப்பறைகள் கட்டியாச்சு. அடிப்படை வசதிகள் எல்லாம் இப்ப வந்ததுதான். வெறும் நிலத்தை வைத்துக் கொண்டு நாக்கு வழிக்கவா? ஆர். எம். வீரப்பன் கல்வி அமைச்சரா இருந்தப்போ, ஒரு வாட்டி இங்க வந்தார். அவர் இந்த கட்டடங்களையெல்லாம் பார்த்து பிரமிக்கப் போய்ப் பாராட்டினார். அப்புறம் சொன்னார் : 'இதுக்கெல்லாம் அரசை எதிர்பார்க்காம நீங்களே பண்ணிட்டதுதான் புத்திசாலித்தனம்' அப்படீன்னு! என்ன பண்றது? இதான் நிலைமை! டொனேஷன் வாங்கித்தான் ஆகணும்! ஸ்கூல் வளர வேறு என்ன வழி?''

''இருக்கப்பட்டவர்கள் கொடுக்கலாம். இல்லாதவர்கள்?''

சிரிக்கிறார். ''இல்லாதவங்க இங்கிலீஷ் மீடியத்துக்கு வர்றதில்லை சார்!''

இது இப்படியாக இருக்க, விதி விலக்கான சில பள்ளிகளும் ஆங்காங்கே இருக்கத்தான் செய்கின்றன. அட்டையில் உட்கார்ந்திருக்கும் சிறுமி ரம்யா மயிலை பி.எஸ். சீனியர் செகண்டரி பள்ளியில் எட்டாம் வகுப்பு மாணவி. பள்ளியில் சேருகையில் முந்நூறோ, முந்நூற்றைம்பதோ ஃபீஸ். தவிர ஆயிரம் முதல் இரண்டாயிரம் வரை டொனேஷன். இது என்ன அதிசயம் என்று கேட்பவர்களுக்கு : படிப்பு முடிந்து டி.ஸி. வாங்கு கையில் கொடுத்த டொனேஷனைத் திரும்பத் தந்து விடுகிறார்கள்! (மெய்சிலிர்க்கிறதா? - இதெல்லாம் பாலைவனச் சோலை ரகம்.)

தனியார் பள்ளிகள் சிலவற்றில் 'டிஸிப்ளின்' என்ற பெயரில் அடிக்கிற கூட்டி இருக்கிறதே... அதுவும் பெற்றோருக்குச் செலவுச் சுமையை ஏற்றுகிற விதமாகத்தான் இருக்கிறது.



## சமாளிப்பது எப்படி?

1. கான்வென்ட்களில் இரண்டு ரகம். பணம் வாங்குவதால் பிரசித்தி பெற்றவை மற்றும் பிரசித்தி பெற்று விட்டதால் பணம் வாங்குபவை. இதில் இரண்டாவது ரகத்தார் கொஞ்சம் நேர்மையாக நடந்து கொள்வதாகக் கேள்வி. கண்டறிந்து அணுகுவது உங்கள் கடன்!

2. டொனேஷன் போன்றவைகளில் ஒன்றும் கை வைக்க முடியாது. லேப, யூனிஃபாரம் உள்ளிட்ட வகையறாக்களில் கொஞ்சம் சுமாரான குவாலிட்டியைத் தேர்ந்தெடுப்பதன் மூலம் சற்று செலவு குறைகலாம். (சிறு துளி பெரு வெள்ளம்!)

3. தப்பித் தவறியும் பள்ளி தரும் சரக்குகளை ஏற்காதீர்கள். என்ன வேண்டும் என்பதைக் கேட்டுக் கொண்டு வெளியே வாங்கிக் கொள்ளவும். இம் முறையில் கணிசமான பணம் மிச்சப்படும்.

4. ஷூ, சாக்ஸ், டை - இவை நம் சீதோஷ்ணத்துக்குத் தேவையே இல்லை. சொன்னால் பள்ளி கேளாது! எனவே இருப்பதிலேயே மலிவான குவாலிட்டியைத் தேர்ந்தெடுப்பது நலம்.

5. உங்களிடம் சைக்கிள் (அ) ஸ்கூட்டர் இருக்கிற பட்சத்தில் ஸ்கூல் வேன் நிச்சயம் வேண்டாம்! அப்படி உங்களிடம் வாகனமே இல்லாவிட்டாலும் தூக்கிக் கொண்டு போயாவது விட்டு வாருங்கள்! வேனுக்குக் கொடுக்கிற காசைச் சேர்த்தாலே சொந்தமாக ஒரு வாகனம் வாங்கி விடலாம்!

6. இன்று வங்கிகளிலும் சில தனியார் நிதி நிறுவனங்களிலும் உங்கள் குழந்தை வளர வளர கூடவே பணம் வளரும் திட்டங்களும் வழி முறைகளும் நிறைய உள்ளன. உங்களுக்குக் குழந்தை பிறந்த உடனே மறக்காமல் அவற்றில் ஒரு தொகையை மொத்தமாகவோ அல்லது மாதா மாதமோ செலுத்தி உறுப்பினராகி விடுங்கள்! ஜூன் ஜூரம் சமயத்தில் வருடா வருடம் கைகொடுக்கும்.

யூனிபாரமில் இரண்டு மூன்று வகை, டை, பூட்ஸ், சாக்ஸ், கலர் கலராய் புத்தகங்கள், பள்ளி பெயரிட்ட நோட்டுகள் - என்ன கொடுமை என்றால் அத்தனையையும் பள்ளியிலேயேதான் வாங்க வேண்டும்! அவர்கள் நிர்ணயிக்கிற விலை! அவர்கள் தருகிற சரக்கு! தவிர அவர்கள் ஏற்பாடு பண்ணுகிற பஸ் அல்லது வேன். இப்படியான செலவுகளும் தவிர்க்க முடியாதவைகளாகின்றன.

இவற்றையெல்லாம் எப்படிச் சமாளிப்பது?

'ஒரே வழிதான் சார்! நாளைக்கே ஒரு நர்சரி ஸ்கூல் ஆரம்பிச்சிடுங்க!'

– பா. ராகவன்

அட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்: கோபிநாத்

# புரட்சித் தலைவியின் கடிதம்!



அன்புள்ள கிளின்டன் அவர்களுக்கு,

இன்று காலை நாளிதழைப் பார்த்ததுமே என் மதிப்பில் நீங்கள் 'ஓஹோ' என்று உயர்ந்து விட்டீர்கள் போங்கள்!

அதான், ஜனாதிபதிக்குரிய ''ஏர்ஃபோர்ஸ் ஒன்'' பிரத்யேக விமானம் தரை இறங்கிய பிறகும் நீங்கள் வெளியே வராமல், ஸ்பெஷலிஸ்ட் ஒருவர் கையால் விமானத்துக்குள்ளேயே சிகை அலங்காரம் செய்து கொள்ள ஒரு மணி நேரம் எடுத்துக் கொண்டதையும், அதனால் அந்த ஒரு மணி நேரமும் மற்ற விமானங்கள் ரன்வேயைப் பயன்படுத்தி இறங்கவோ ஏறவோ முடியாமல் போனதையும்; பயணிகள் ஏராளமான பேர் அவதிப்பட்டதையும் படிக்க என் மனம் குளிர்ந்தது. இவ்வளவு சீக்கிரம் என்னிடம் நீங்கள் பாடம் கற்றுக் கொண்டு தேறி விடுவீர்கள் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை! கங்கிராட்ஸ். சென்னைக்கு எப்போ வருகிறீர்கள், சொல்லுங்கள். இதற்காகவே நாலு டாக்டர் பட்டங்களுடன் நாலு பல்கலைக் கழகங்களைத் தயாராக இருக்கச் சொல்கிறேன்.

உங்கள் நடத்தைக்காக எதிர்க்கட்சியினர் ஆர்ப்பாட்டம் பண்ணக்கூடும்; பத்திரிகைகள் கண்டிக்கவும் செய்யலாம். அலட்சியப்படுத்துங்கள். பதில் சொல்லியே ஆக வேண்டும் என்றால், ''தமிழ்நாட்டில் ஜெயலலிதா ஆட்சியில் என்ன நடக்கிறது என்று பார்த்து விட்டு வந்து பேசுங்கள்'' என்று கூறி அவர்களை ஒரு குழுவாக இங்கே அனுப்பி விடுங்கள். நான் கவனித்துக் கொள்கிறேன். அந்தச் சமயம் பார்த்து என் ஆயிரம் கார் பவனி ஒன்றை நடத்ினால் ஆயிற்று! போக்குவரத்தை ஐந்து மணி நேரம் ஸ்தம்பிக்கச் செய்து, வருகிறவர்களை வெய்யிலில் வேகவைத்துத் தண்டித்தால் அப்புறம் உங்களைக் குறைகூற அவர்களுக்கு வாய் வருமா!

இங்கே என்னைப் பற்றியும்தான் பல அற்பங்கள் கண்டித்து எழுதுகிறார்கள்; குறைகூறிப் பேசுகிறார்கள். நான் கண்டுக்கிறதே கிடையாது. இனி எஸ்.டி.எஸ்ஸிடம் சொல்லி, ''கிளின்டனுக்காக அமெரிக்காவில் விமானங்கள் தாமதிக்கப்படலாம் என்றால் தமிழ் நாட்டில் ஜெயலலிதாவுக்காக கார்கள் நிறுத்தி வைக்கப்படக் கூடாதா?'' என்று அறிக்கை விடச் செய்யலாம்.

முதல் பாடத்தில் பிரமாதமாகத் தேறி விட்ட உங்களுக்கு அரசியலில் அடுத்த பாடத்தையும் கற்றுத் தரத் தீர்மானித்து விட்டேன். அரசுச் செலவில் விளம்பரம் பண்ணக் கற்றுக் கொள்ளுங்கள். உங்கள் மகள் வளர்க்கும் பூனை, குட்டி போட்டால் கூட, ''எழுச்சித் தலைவர் கிளின்டன் அருளாசியோடு குட்டி போட்ட பூனைக்கு நன்றி, நன்றி,'' என்று ஒவ்வொரு அரசு இலாக்காவும் உங்கள் கட்சிக்காரர்களும் அமைச்சர்களும் தனித்தனியே நாளேடுகளில் விளம்பரம் பண்ண வேண்டும். உங்கள் மனைவி கழுத்தளவு புரண்ட முடியைக் காதளவோடு வெட்டி அலங்கரித்துக் கொண்டிருக்கிறாராமே? இந்தப் புதிய ஃபாஷன் அலைக்கும் உங்கள் கட்சியின் மகளிர் அணி நன்றி கூறி விளம்பரம் செய்ய வேண்டும்.

அமெரிக்காவில் நீங்கள் எங்கே போவதாய் இருந்தாலும் அரசுச் செலவில் பக்கம் பக்கமாக நாளிதழ்களில் ''வருக! வருக!'' விளம்பரம் தரச் செய்யுங்கள். கட்-அவுட் வைக்கச் சொல்லுங்கள். இப்படி விளம்பரம், வரவேற்பு, பாதுகாப்பு எல்லாவற்றுக்கும் ஏராளமாகச் செலவான பிறகு, பயணத்தை ரத்து செய்யுங்கள். அதற்குக் காரணம் ஏதும் சொல்லக் கூடாது. சொன்னால் உங்கள் மதிப்பே போய் விடும். ''ஐயோ! லட்சக்கணக்கான டாலர்கள் மக்களின் வரிப் பணம் பாழாயிற்றே'' என்று பலரும் மூக்கால் அழுவார்கள். ''டோண்ட் கேர்'' என்று இருங்கள்.

ஏர்ஃபோர்ஸ் ஒன்னில் வைத்து முதல் பாடத்தில் தேறியது போலவே, இந்த இரண்டாவது பாடத்திலும் நீங்கள் வெற்றி பெற்றதாக எனக்குச் செய்தி கிடைத்ததும், அடுத்த அரசியல் பாடத்தை இலவசமாக(!) அனுப்பி வைக்கிறேன். ஆனால் ஒன்று, ''குருவுக்கு மிஞ்சிய கிளின்டன்'' என்று பெயர் வாங்கி விடக் கூடாது. ஜாக்கிரதை!

இப்படிக்கு,

புரட்சித் தலைவி

மறுபதிப்பு

# முன்வெளியீட்டுத் திட்டம்



## கம்பராமாயணம்

மூலமும் தெளிவுரையும்

9 தொகுதிகள்

5000 பக்கங்களுக்கு மேல்




## வில்லிபாரதம்

மூலமும் தெளிவுரையும்

6 தொகுதிகள்

2500 பக்கங்களுக்கு மேல்

கம்பராமாயணம், வில்லிபாரதம் ஆகிய இரு பெரும் நூல்களை மறுபடியும் முன் வெளியீட்டுத் திட்டத்தின்கீழ் வெளியிடுகிறோம். இரண்டுவிதமான சலுகைகள் உண்டு.

**சலுகை 1**

ஜூன் மாதம் 10-ம் தேதிக்குள் முன்பணம் அனுப்புவோர்க்கு 40% கழிவு உண்டு.

| | | |
|---|---|---|
| 1. | கம்பராமாயணம் 9 தொகுதிகள் விலை | ரூ. 540.00 |
| 2. | வில்லிபாரதம் 6 தொகுதிகள் விலை | ரூ. 300.00 |
| | | 840.00 |
| | கழிவு 40% | 336.00 |
| | | 504.00 |

**சலுகை 2**

ஜூன்மாதம் 11-லிருந்து ஜூன் 30-க்குள் முன்பணம் அனுப்புவோர்க்கு 30% கழிவு உண்டு

| | |
|---|---|
| நூல்களின் விலை | ரூ. 840.00 |
| கழிவு 30% | ரூ. 252.00 |
| | 588.00 |

**நூல்கள் அனுப்புவது எப்போது?**

ஜூலை மாதம் நூல்கள் அனுப்பப்படும். வழக்கம்போல் தபால் செலவைத் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக. பணத்தினை DD (அ) MO மூலம் அனுப்புக.

M.O. or D.D. அனுப்ப வேண்டிய முகவரி

**VARTHAMANAN PATHIPPAGAM**

ARR Complex, 141, Usman Road, Madras-17. (Near Panagal Park)

குறிப்பு: பணம் அனுப்ப வேண்டிய தேதியைக் கவனிக்கவும்: குறிப்பிட்ட தேதிக்குப்பின் இந்தச் சலுகை இல்லை.

## TV மர்சனம் :

●● மெட்ரோ வந்தாலும் வந்தது, ஏனைய தொ.கா. நிகழ்ச்சிகளைப் பார்ப்பதென்பதே தற்சமயம் ராவ் சிரிப்பு மாதிரி துர்லபமாகி விட்டது. உருப்படியான ஒரே மெட்ரோ நிகழ்ச்சி (ஸினிமாதான் என்றாலும்) 'சித்திரம் பேசுதடி'. சரித்திரம் படைத்த படங்களை நுணுக்கமாக அலசும் நேர்த்திக்கு முதல் மார்க். கடந்த இரு வாரங்களாகப் பார்த்திபனின் 'புதிய பாதை'. ஷாட் வாரியாக ரசித்து ரசித்துச் செய்திருப்பது பார்க்கையில் புரிந்தது. 'இதே தரத்தில் இன்னொரு படம் எடுப்பேன்' என்று சொல்வாராக்கும் என்று பார்த்தால் ஓர் அனாதைக் குழந்தையை தத்தெடுக்கப் போவதாகச் சொன்னார்!

●● முன்னமேயே ஒளிபரப்பான சில பழைய சீரியல்களைத் தூசிதட்டி மறுபடி ஒளிபரப்ப ஆரம்பித்திருக்கிறார்கள். எஸ். வி. சேகர் மற்றும் காத்தாடி. ரொம்பக் கஷ்டப்பட்டு சிரிக்க வைக்க முயற்சி செய்கிறார்கள். ஆனால் பழக என்பதாலோ என்னவோ சிரிப்புத்தான் 'வருவேனா' என்கிறது.

●● தேசிய ஒளிபரப்பில் பத்மா சுப்ரமணியம். காஞ்சிப் பெரியவரிடம் அவர் கொண்டிருக்கும் உள்ளார்ந்த பக்தி - நிகழ்ச்சியில் தௌஸண்ட் வாட் பிரகாசிப்பாய்த் தெரிந்தது.

●● ராமானந்த சாகரின் 'ஸ்ரீகிருஷ்ணா' பற்றிச் சொல்ல வேண்டும். தூர்தர்ஷன், தொடராக ஒளிபரப்ப



# இலவச இணைப்பு கேட்கும் கிருஷ்ணா!

முகம் கவித்ததன் காரணமாய் கேஸட்டாக வந்து, இப்போது மெட்ரோவில் வலம் வரும் இதனை ஸ்பான்ஸர் செய்ய வி. தாரர் இடையே சிண்டுபிடி போட்டி! ஹிந்தியில் பாலர் பாடம் படித்த பையன் புரிந்து கொள்ளும் அளவுக்கு வசன எளிமை, உறுத்தாத ஒளிப்பதிவு, கச்சிதமான நடிகர் தேர்வு, கட்டிப் போடும் டைட்டில் ஸாங்... சொல்லிக் கொண்டே போகலாம். இலவச இணைப்பு தருகிறாரா என்று ஆசிரியரைக் கேளுங்கள்.

●● கொஞ்சம் வித்தியாசமாக திங்கள் இரவு நலவாழ்வில் ஓர் ஆண், குழந்தை வளர்ப்பு பற்றிப் பேசுகிறாரே என்று நிமிர்ந்து உட்கார்ந்தால் ஆடியோ அவுட்! தடங்கலுக்கு வருந்தாது பத்து நிமிஷ பேசாப் படம்! ஸ்டார் டீவியில் இரண்டு செகண்டுக்குமேல் இதுவரை எப்போதுமே தடங்கல் ஏற்பட்டதில்லை என்று யாரோ எப்போதோ சொன்னார்கள். நீளமாக ஒரு பெருமூச்சு விடுங்கள். அத்தே!

– கிச்சா



# ஜன்னல் அருகே ஓர் உலகம்!

## அன்று...

● எப்படியாவது கல்லூரியில் சேர்ந்து பட்டப் படிப்புப் படிக்க ஆசை காந்தி மதிக்கு... தந்தையில்லாத குழந்தையாக, உறவினர் ஆதரவில் தாயுடன் வளர்ந்தவள். உறவினர்களோ பெண்களுக்குக் கல்லூரிப் படிப்பு வீண் செலவு என்று எண்ணினார்கள். காந்திமதி தமக்குச் சொந்தமாக ஒரு சல்லிக் காசு கூட இல்லை என்று கல்லூரி நிர்வாகத்திடம் எழுதிக் கொடுத்தார். ஆதரித்த உறவினர்களுக்கு அசாத்திய கோபம் வந்தது. ஆனால், அந்தக் கால விதிகள்படி காந்தி மதிக்கு உதவிச் சம்பளம் அளிக்கப்பட்டது. சென்னை குயின் மேரீஸ் கல்லூரியில் விஞ்ஞானத்தில் பட்டம் பெற்று, பின்னர் மெட்ராஸ் கிறிஸ்டியன் காலேஜில் எம்.ஏ. பொருளாதாரமும் படித்து முடித்தார் - துணை நின்றவை அம்மாவின் பக்கபலமும் ஆறு வயது வரை அப்பா போட்ட அறிவு அஸ்திவாரமும்.

● 'எல்லாப் பெண்களையும் போல் கல்யாணம் செய்து கொள்' - காந்திமதியை வற்புறுத்தினார்கள் உறவினர்கள். ஓர் இளம் விதவையாகத் தம் தாயார் பட்ட துன்பங்கள் ஆழமான பாதிப்பை ஏற்படுத்திவிருக்க, இரு மணம் வேண்டாம் என்றார். அவர் உணர்வுகளை மதிக்காமல் மாப்பிள்ளைகளைத் தேர்ந்தெடுத்த போது துணிவுடன் நிராகரித்தார்.

● காந்திமதி கல்லூரியில் இறுதி யாண்டு படிக்கையில் காந்திஜி சென்னை வந்திருந்தார். அவரது சேவா தளத்தில் உறுப்பினராகிப் பணியாற்றினார் காந்திமதி.

● 1950 இல் தனியாக ரயிலேறி புது டெல்லி பல்கலைக் கழகத்தில் வேலைக்கான நேர்முகத் தேர்வுக்குப் போனார். வழியில் நர்மதா நதியில் வெள்ளப் பெருக்கு, ரயில் போக்குவரத்து தடைப்பட்டது. எல்லோரும் கவலைப்பட்டுக் கொண்டிருக்க, காந்தி மதியோ நுங்கும் நுரையுமாகப் பொங்கி ஓடிய நர்மதையின் கட்டுக் கடங்காத கம்பீரத்தை ரசித்து மெய்ம்மறந்து நின்றார்.

● டெல்லி பல்கலைக் கழகத்தில் வேலை கிடைத்து விட்டது. அங்கே ஆசிரியர்கள் உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களைக் காட்டிலும் குறைவான சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார்கள். Delhi University Teachers Association என்ற அமைப்பு தோற்றுவிக்கப்பட்டு பேச்சு வார்த்தைகள் மூலம் சம்பள உயர்வு பெறப்பட்டது - 200 ரூபாய் சம்பளம் 250 ரூபாயானது! இந்த சாத்வீகப் போராட்டத்தில் காந்திமதிக்குக் கணிசமான பங்கு.

● இந்தோ-சீனா யுத்தத்தின் போது, நேருஜியின் கொள்கைகளுக்கு ஆதரவு தெரிவிக்கும் முகமாகப் பல்கலைக் கழக ஆசிரியர்கள் ஊர்வலம் சென்ற போது காந்திமதி பங்கேற்கவில்லை. 'நேருவின் கொள்கையில் எனக்கு உடன்பாடு இல்லை' என்று துணிந்து விலகி நின்றார். இதற்கான 'பலனையும்' அவர் அனுபவிக்க வேண்டியிருந்தது.

● டெல்லி ஃபிலிம் சொஸைட்டி ஆரம்பித்து, முதன் முதலில் திரைப்பட விழா நடத்த முனைந்து செயல்பட்டவர்களுள் ஒருவர் காந்திமதி.

● தோட்டம் பயிரிடுவதில் காந்தி மதிக்கு அலாதியான ஆர்வம் - பாத்தி பாத்தியாக அமைத்த ஒழுங்கான தோட்டமில்லை.... அங்குமிங்குமாக அள்ளித் தெளித்தது போன்ற விதவிதமான வண்ணப் பூச்செடி, கொடி வகைகள்...

● கால் போன போக்கில் நடந்து புதிய இடங்களின் அழகுகளை ரசிப்பது; பழைய கோயில்களின் கம்பீரத்தில் லயிப்பது... இவையெல்லாம் காந்திமதியின் வாழ்க்கையில் கலந்து போன விஷயங்கள்.

## இன்று...

● காந்திமதி சக்கர நாற்காலியின் உதவி இன்றி அசைய முடியாது. அதிலும் யாராவது தூக்கி உட்கார வைக்க வேண்டும். மருத்துவ சிகிச்சையின் பக்க விளைவுகளால் கை விரல்களும் செயல்திறன் இழந்து விட்டன.

● உடன் தங்கியிருக்கும் பணிப்பெண் உதவியுடன் அன்றாடக் கடன்களை முடிக்கிறார். அவர் தலைசீவி விட்டதும் 'தாங்க் யூ' என்று நன்றி தெரிவிக்கிறார்.

● ஒரு கைக் குட்டையைக் கூட பிறர் உதவியின்றி எடுத்துக் கொள்ள காந்திமதியால் முடிவதில்லை.

● வானமே எல்லையாக வளைய வந்த வரின் உலகம் நான்கு சுவர்களுக்குள் குறுகி விட்டது. அறிவும் ஆற்றலும் ஆர்வமும் இளமையும் நிரம்பிய ஒரு சூழலிலிருந்தவருக்குத் தனிமையே வாழ்க்கை முறையாகி விட்டது. உலகம் படுக்கைக்கருகே உள்ள ஜன்னலில் ஆரம்பித்து, அங்கேயே முடிவடைகிறது.

ஆனாலும் காந்திமதியின் முகத்தில் அமைதியான புன்னகை தவழ்கிறது. பக்கங்களைக் கஷ்டப்பட்டுப் புரட்ட வேண்டியிருந்தாலும் கைகளில் எப்போதும் புத்தகம்; 'எனக்கு இது நேர்ந்ததால் உலகம் அஸ்தமித்து விடவில்லை' என்ற தோரணை; அநியாயங்களைச் சுட்டிக் காட்டிப் பேசுகையில் விழிகளிலும் வார்த்தைகளிலும் தெறிக்கும் லட்சியத் தீப்பொறி...

''எப்படி உங்களால் முடிகிறது...'' காந்திமதியிடம் கேட்டோம்.

''ஆரம்பத்தில் ரொம்ப உடைஞ்சு போய் விட்டேன். நடக்கையில் ஏற்பட்ட ஒரு சிறு விபத்து முழங்காலில் வீக்கம் ஏற்படுத்தியது. அப்புறம் படிப்படியாக நிலைமை மோசமாகி இப்படிப் படுக்கையில் கிடத்தி விட்டது. ஆபரேஷன் செய்து குணப்படுத்தி விடலாம் என்று தியேட்டர் வரை அழைத்துச் சென்ற டாக்டர், மூன்று மணி நேரங்கள் அங்கு வைத்திருந்து பின்னர் கைவிரித்து விட்டார். சரியான காரணம் யாரும் சொல்லவில்லை... எனக்கு உலகத்தின் பேரில் கோபம்; என் பேரிலேயே ஆத்திரம். என்னவெல்லாம் திட்டங்கள் வைத்திருந்தேன்...! இந்தியா முழுவதும் சுற்றிப் பார்க்க வேண்டும். இலங்கைக்குப் படகில் செல்ல வேண்டும்; தாய்லாந்து, ஜப்பான், இன்னும் உலக நாடுகள் பலவற்றுக்குப் போக வேண்டும்...

''இதெல்லாம் முடியாது என்பது ஒரு பக்கம் இருக்க, ஆயுளுக்கும் யாரையாவது சார்ந்து வாழ வேண்டும் என்ற பயங்கரம் என்னைக் கலக்கி விட்டது. தற்கொலை எண்ணம் கூட தலைதூக்கியது. மனோதத்துவ நிபுணரின் உதவியை நாடினேன். அவர் கொடுத்த மருந்துகள் என் நிலைமையை மேலும் மோசமாக்கின.

''எனக்கு யாராவது உதவ முடியுமானால் அது நானாகவேதான் இருக்க முடியும் என்ற முடிவுக்கு வந்தேன். மகிழ்ச்சியும் துணிவும் என்னதான் பிறர் ஊக்கத்தால் ஏற்பட்டாலும் நமக்குள்தானே உதயமாக வேண்டும் - அதனால் முயற்சி நம்மிடமிருந்துதான் வெளிப்பட வேண்டும்...''

''இந்தத் தெளிவு பெற உங்களுக்கு உதவியது எது...?''

''எல்லார் வாழ்க்கையிலும் இழப்புகள் இருப்பதைக் கவனித்து உணர்ந்தேன். சீன தேசத்து 'Tao' தத்துவ விளக்கம் ஒன்று உண்டு - 'நதி தனக்குக் குறுக்கே வரும் பாறையைச் சுற்றி வளைத்துத் தன் பயணத்தைத் தொடர்வது போல் வாழ்க்கையைத் தொடர வேண்டும்.' இது மீண்டும் மீண்டும் எனக்குள் அலைமோத, குறுக்கிடும் பாறையைக் கரைத்துக் கூழாங்கல்லாக்க முடியாவிட்டால், அதைச் சுற்றி வளைந்து கொடுத்துத்தான் போக வேண்டும் என்று உணர்ந்தேன்.

''மேலும் என் துக்கத்தை உதறாமல் சுமப்பதால் என்னிடம் அன்பு செலுத்துவோரையும் அது பாதிக்கிறதல்லவா - மற்றவர்கள் வாழ்க்கையை இவ்வாறு பாதிக்க எனக்கு உரிமையில்லை என்று தோன்றியது... என் கனவுகளும் என் ஆசைகளும் மட்டுமே உலகம் அல்ல - என்னால் முடியாமல் போனதை எத்தனையோ பேர் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று உணர்ந்தேன். எனக்குள் படிப்படியாக அமைதி வந்து குடியேறி விட்டது.''



● காந்திமதி

– எஸ்ஸார்

புகைப்படம் : கோபிநாத்




# ஸ்ரீராம் சித்திரை சீட்டு விழாவில்

## அறிமுகப்படுத்துவோருக்கான பல்வேறு பரிசுகளை வென்ற 59,238 சந்தாதாரர்களுக்கும் எங்கள் நல்வாழ்த்துக்கள்...

மகத்தான மக்கள் இயக்கமான ஸ்ரீராம் சிட்ஸ் 74491 புதிய உறுப்பினர்களைப் பெற்று மேலும் வலுப்பெறுகிறது.

பரிசுகள் வென்ற 59,238 சந்தாதாரருக்கும் பரிசுகள் விநியோகிக்கப்பட்டு வருகின்றன.

**விஸிபி வென்றோர்.**

K. பரிமளா
31, சக்ரபாணி சந்நதி, கும்பகோணம்.
மற்றும் 12 பேர்.

**கலர் டிவி வென்றோர்**

திருமதி S. கஸ்தூரி
20, வடக்கு மாசி வீதி, மதுரை - 625 001.
மற்றும் 7 பேர்.

**வாஷிங் மெஷின் வென்றோர்.**

S. நளினி
C.C.S.M. குவார்ட்டர்ஸ், பெரிய சேவலை, உளுந்தூர்ப்பேட்டை.
மற்றும் 11 பேர்.

**வேக்யூம் கிளீனர் வென்றோர்..**

திருமதி M. தமிழ்ச்செல்வி
W/o. திரு. மதியழகன்
கிழக்கு மாரியம்மன் கோயில் தெரு, நாமகிரிப்பேட்டை,
ராசிபுரம் தாலுக்கா, சேலம் மாவட்டம்.
மற்றும் 30 பேர்.

**8 கிராம் தங்கப்பதக்கம் வென்றோர்.**

திருமதி K. ராஜலட்சுமி
W/o. திரு. கலியமூர்த்தி
எண். 5, முதல் குறுக்குத் தெரு, பிருந்தாவனம், பாண்டிச்சேரி
மற்றும் 24 பேர்.

**2-இன்-1 வென்றோர்.**

V. ராணி
73, தெற்கு வாசல், ஸ்ரீரங்கம், திருச்சி.
மற்றும் 88 பேர்.

**வெள்ளி சந்தனப் பேலா வென்றோர்.**

N. கோமதி
20, சண்முகா நகர், சிட்லபாக்கம், சென்னை-600 064.
மற்றும் 157 பேர்.






**ஸ்ரீராம்** சிட்ஸ் &
இன்வெஸ்ட்மெண்ட்ஸ் பி. லிமிடெட்.
1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை-600 002.
நிர்வாக அலுவலகம்: "சுப்பிரமணியம் பில்டிங்"
போன்: 8274431 | 8275536 | 8270400 | 8273932.

ADWAVE/SCI/4568

*ஸ்ரீராம் சிட்ஸ் — மேலும் பலருக்கும் பலவகையிலும் பலன்.*



ஸ்ரீ

# கல்கி



1993
ஜூன் 6
மலர் : 51
இதழ் : 45
ஸ்ரீமுக
வைகாசி 24

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## டிஸ்மிஸ் செய்யுங்கள்!

‘ஜெயலலிதா அரசை டிஸ்மிஸ் செய்யும் நோக்கமிருந்தால் அந்த எண்ணத்தை உடனடியாக உள்ளத்திலிருந்து டிஸ்மிஸ் செய்யுங்கள்’ என்று மத்திய காங்கிரஸ் அரசைக் கேட்டுக் கொள்கிறோம்!

அ.தி.மு.க. ஆட்சியில் இங்கு தவறு ஒன்றுமே நடக்கவில்லை என்று நாம் சாதிக்கவில்லை. நிறையவே தவறுகளும் குற்றங்களும் நிகழ்ந்துள்ளன. அதிகார துஷ்பிரயோகங்கள், லஞ்ச லாவண்யங்கள், திறமையற்ற நிர்வாகம் எல்லாம் இருக்கவே செய்கின்றன. ஆனால் இதற்கெல்லாம் ஆட்சியை டிஸ்மிஸ் செய்வது என்று ஆரம்பித்தால் கம்யூனிஸ்ட் தலைவர் தா. பாண்டியன் கூறியது போல, இந்தியாவில் மத்திய அரசு உள்பட எந்த ஆட்சியுமே நிலைபெற முடியாது. ஜனநாயகத்தில் மக்கள் எத்தகைய ஆட்சிக்குத் தகுதி உடையவர்களோ அத்தகைய ஆட்சியை அடைகிறார்கள். அ.தி.மு.கவைப் பதவியில் அமர்த்திய மக்கள், நல்ல ஆட்சியோ, மோசமானதோ அடுத்த தேர்தல் வரை அனுபவித்தே ஆக வேண்டும். டிஸ்மிஸ் உத்தரவுகள் மக்களின் உரிமையில், மக்களின் தீர்ப்பில் தலையிட்டதாகவே ஆகும்.

"அப்படியானால் 356 எதற்கு?" என்றால் ரொம்ப ரொம்ப ஆபத்தான நிலை தோன்றும் போது பிரயோகிக்கத்தான். "இந்த ஷரத்து பயன்படுத்தப்படாமலே இருக்கும் என்று நம்புகிறேன்" என்றுதான் அதனை உருவாக்கிய அம்பேத்காரே சொன்னார். ஆனால் மத்தியில் அடுத்தடுத்து ஆட்சிக்கு வந்தவர்கள் அதிகார மமதை கொண்டு அவர் வாக்கைப் பொய்யாக்கி வருகிறார்கள். இப்போது தமிழகத்தில் 356 பிரயோகிப்பதற்குத் தேவையான அளவில் சட்டம் ஒழுங்குச் சீர்குலைவு ஏதும் இல்லை. அதனால்தான் புலிகள் விஷயத்தை எடுத்துக் கொண்டு முதல்வருடன் வாதப் பிரதிவாதத்தில் இறங்கியிருக்கிறார் சவாண். காவலிலிருந்து புலிகள் – ராஜீவ் வழக்கில் சாட்சிகள் – தப்பியுள்ளதைக் காட்டி மிரட்டுகிறார்! இதற்காக 356 பிரயோகிப்பது எனில் அடுத்த கணமே மகாராஷ்டிரத்தில் பவார் தலைமையிலான காங்கிரஸ் அமைச்சரவை ஆளும் தகுதியை இழக்கும். தொடர் குண்டு வெடிப்பும், அதற்குக் காரணமான மேமன் சகோதரர்களும் பிறரும் தப்பி ஓட விடப்பட்டதும் என்ன இலேசுப்பட்ட விவகாரமா?

லஞ்ச ஊழல் அதிகரித்து விட்டது என்றால் எந்த மாநிலத்தில் இல்லை? ஏன், போஃபர்ஸ் ஊழலையும் பின்னணிக்குத் தள்ளியிருக்கும் பங்கு மார்க்கெட் ஊழலுக்கு மத்திய நரசிம்மராவ் அரசு அல்லாமல் வேறு எந்த அரசு ராஜினாமா செய்வது? இதற்குப் பதில் கூறி விட்டு இங்கே 356 பிரயோகிக்கட்டும்! ஏற்கெனவே, உ.பி. அரசு நீங்கலாக மேலும் மூன்று பி.ஜே.பி. ஆண்ட மாநிலங்களில் 356 பிரயோகித்ததில் மத்திய அரசுக்கு ரொம்பக் கெட்ட பெயர். எந்த அளவுக்கு என்றால், அந்த மாநிலங்களில் தேர்தல் நடத்தவே அஞ்சும் அளவுக்கு! அத்தகைய கெட்ட பெயர் தமிழகத்திலும் காங்கிரஸுக்கு ஏற்பட வேண்டுமா?

தாம் மறுபடி பதவிக்கு வர முடியும் என்ற ஒரே காரணத்துக்காக நேற்றைய கதையை மறந்து இன்று 356ஐ வரவேற்கும் கருணாநிதியின் சந்தர்ப்பவாதம் ஒருபுறம் இருக்க, தார்மீக ரீதியில் அல்லாது அரசியல் கண்ணோட்டத்தில் பார்த்தால் கூட, ‘ஜெ’ ஆட்சியைக் கவிழ்ப்பதால் காங்கிரஸுக்கு ஒரு விதமான ஆதாயமும் இல்லை. ‘ஜெ’வை அகற்றி மு.க.வை அரியாசனத்தில் அமர்த்துவது தவிர வேறு என்ன சாதிக்கப் போகிறார்கள்? அல்லது தி.மு.க.வுடன் உறவைப் புதுப்பித்து மீண்டும் முதுகுச்சவாரிக்குத் தயாராகிறார்கள் எனில் அதைவிடக் கேவலம் வேறில்லை.

சு. சுவாமியின் தந்திரத்துக்கு இணங்கி, தேர்தல் கமிஷன் மூலம் ‘ஜெ’யின் பதவியை மட்டும் பறித்து, சட்டசபையைக் கலைக்காதிருந்து, கூட்டணி ஆட்சிக்கு முயற்சி செய்வதும் எதிர்பார்க்கிற பலனைத் தராது. ஆட்சித் திறன், அரசியல் நாகரிகம் எல்லாம் அதலபாதாளத்துக்குச் சரியுமே தவிர, லவலேசமும் முன்னேற்றம் இராது. ஐந்து வருஷம் ஆள அனுமதித்து, சிறந்த எதிர்க்கட்சியாகப் பணியாற்றி, மக்களின் நன்மதிப்பைப் பெற்று, தேர்தலைச் சந்திப்பதே நேர்மையான வழி. குறுக்கு வழிகளில் புகுந்தால் காங்கிரஸ், அரசியல் காட்டில் காணாமல் போகும்!

ராஜீவுக்குப் போதிய பாதுகாப்பு அளிக்கத் தவறியதாலும் வர்மா கமிஷன் தீர்ப்பு அடிப்படையிலும் வீடு போய்ச் சேர வேண்டியவர்தான் பீஷ்ம நாராயணர். போய் வரட்டும். புதிய ஆளுநர் சென்னா ரெட்டியை வாழ்த்தி, வரவேற்கவும் செய்யலாம், காங்கிரஸின் சின்னத்தனங்களுக்குத் துணை போகாத சீரான ரெட்டியாக அவர் திகழும் வரை.

# இலவசம்!








வாங்கும் ஒவ்வொரு
ஸ்ரீபெட் பாட்டில் அல்லது
ஜாருடன் 15 அழகான
பள்ளிக்கூட லேபில்கள்
இலவசம்.

**உங்கள் கவனத்திற்கு**

★ உங்கள் ஸ்ரீபெட் பில்களை
பத்திரமாக வைத்திருங்கள்.
ஒரு உன்னதமான வாய்ப்பு
காத்திருக்கிறது. விரைவில்
மேலும் விவரங்கள்.

இச்சலுகை 31 ஆகஸ்டு 1993
வரை மட்டுமே.




ஸ்ரீராம்
நிறுவனத்தின்
தரமான தயாரிப்பு!

## ஸ்ரீபெட்

**ஜார்கள் ◆ பாட்டில்கள்**

உடையாதவை

உணவுத்தரம் காப்பவை ◆ சுகாதாரமானவை

விநியோகஸ்தர்கள்:
ஸ்ரீராம் சேல்ஸ்
இன்டர்நேஷனல்

AKSHAR SSI/9304.1

✱ இந்த வாய்ப்பு சென்னை, வேலூர், திருச்சி, கரூர், தஞ்சை, சேலம், ஈரோடு, கோவை, திருப்பூர், மதுரை, நெல்லை, மயிலாடுதுறை, கடலூர், தூத்துக்குடி, நாகர்கோவில், பாண்டிச்சேரி ஆகிய நகரங்களில் மட்டுமே.
இச்சலுகை இல்லாமலும் ஸ்ரீபெட் கிடைக்கும்.




"என்னப்பா ரங்கா?" - அவன் பிரமிப்பைப் பார்த்த கதா கேட்டார்.

"இங்கே வந்து பாருங்க!"

கதாகர் அவசரமாக வந்து ஜன்னல் வழியாகப் பார்த்தார். மாநிறமான, அதிக உயரமில்லாத, லுங்கியும் பனியனும் அணிந்திருந்த ஒரு நடுத்தர வயது மனிதன் உத்தரத்திலிருந்து நேர்கோடாகத் தூக்கில் தொங்கிக் கொண்டிருந்தான்.

"ரங்கா! யாரு இது? ராஜேந்திர பாபுவா?"

"மஸ்ட் பி! என்ன பண்ணலாம்?"

"லெட் அஸ் க்விட்" என்றார்.

"போலீஸ்ல சொல்லலாமா?"

"வேண்டாம். நாம எதுக்கு இங்கே வந்தோம்ங்கற கேள்வி வரும். நம்மகிட்டே என்ன நிரூபணம் இருக்கு? வா! போகலாம்."

"இவன்தான் கதா. இவன்தான்."

"சொல்லாதே! மை காட்! ரங்கா! கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி வந்திருந்தா காப்பாத்தியிருக்கலாம்."

சடசடவென்று படிகளில் இறங்கி, வெளியே வந்து, நடக்கத் துவங்கினார்கள். ரங்காவின் உடல் எங்கும் வியர்வை படிந்திருந்தது.

"கதா! எனக்கு மனசெல்லாம் பதறுது. இவன்தானே? கண்டுபிடிச்சுட்டேன் கதா. மாட்டிப்போம்னு தெரிஞ்சதும் தற்கொலை பண்ணிக்கிட்டான்..."

"இவன்தானா? வயித்து வலி, காதல் தோல்வி எத்தனை இல்லை தற்கொலைக்கு?"

"லாப் அஸிஸ்டெண்ட். ஸிம்டிஸி. ஐயோ கதா, இவனேதான்."

"போய்ட்டான்" என்றார் அதிர்ச்சி விலகாமல்.

"கதா, லெட் அஸ் பிரேக் தி ஹவுஸ். வீட்டை அலசிப் பார்க்கலாம். ஏதாவது கிடைக்குதான்னு பார்க்கலாம். ஊஸி, ட்யூப்...! ரூம் டெம்ப்ரேச்சர்ல வைரஸைப் பாதுகாக்கணும்னா ஒரு நியூட்ரல் கிளசரால் திரவம் வேணும்னு படிச்சேன். அது இருக்கான்னு பார்க்கலாம். மோடிவ்வைத் தேடலாம். மதன்ராஜ் படங்களை ஒட்டி வைச்சிருக்கானான்னு பார்க்கலாம்..."

"அதையெல்லாம் போலீஸ் செய்யட்டும்."

"அவங்களுக்கு எதுவும் தெரியாது கதா."

"செத்துப் போனவன் எழுதி வைச்சிருப்பான். லீவ் இட்."

''கதா, ரொம்ப டீல் பண்றா மாதிரி உணர்றேன். யாரோ கேலி பண்றா மாதிரி.. சே!''

''இட் ஹாப்பன்ஸ். இவன்தான்னு எப்படி சொல்ற? ஒரே ஒரு நிரூபணம் இருக்கா உன் கிட்டே?''

உதயம் தியேட்டரைத் தாண்டி நடக்கையில் ஒரு குதிரை வண்டி சரட்சரட்டென்று கடந்து போனது. கதாகர் யோசித்தவாறு, ''அவன் எதையும் கண்டுபிடிச்சிருக்க சான்ஸ் இல்லை ரங்கா. ஆனா அவன்தான் செஞ்சிருக்கணும்.''

''அதுல எனக்குச் சந்தே கமே இல்லை. போலீஸ் வந்து இவன் பாடியை எடுக் கும் போது லெட்டர், அது இருந்தா, படிப்பாங்க. அதுல எழுதியிருப்பான்...''

''என்னன்னு?''

''சூர்யாவின் மரணத்திற்கு நான்தான் காரணம். எங்க இன்ஸ்டிடியூட்லேர்ந்து வைரஸை திருடிக்கிட்டு வந்து, குதிரை உடம்புல செலுத்தினேன். நான் மதன் ராஜின் ரசிகன். ஆனால் குதிரைக்காரன் துரை போலீஸில் சிக்கிக்கொண்டதும் நான் பயந்து விட்டேன். விசாரணையில் நான் சிக்கிக் கொள்வேனோ என்கிற அச்சத்தில் தற்கொலை செய்து கொள்கிறேன். வாழ்க மதன்ராஜ்!'' என்றான் ரங்கா.

கதா அவனைப் பார்த்து, ''நாளைக்குப் பார்க்கலாம்'' என்றார்.

**ம**றுநாள் அதிகாலை ரங்கா அங்கே சென்ற போது, வாசலில் போலீஸ் ஜீப் நின்று கொண்டிருந்தது. ஆங்காங்கே மனிதர்கள் ஆர்வமாக நின்று கொண்டிருக்க, மாடியில் போலீஸ்காரர்களைப் பார்த்தான். மெதுவாக விசாரித்தான்.

''மாடி வீட்டுல ஒருத்தரு தூக்கு மாட்டிக்கிட்டாருங்க'' என்றான் ஒருவன்.

''என்ன விஷயமாம்? லவ்வா?''

''இல்லீங்க. கடன் தொல்லையாம். லட்சக்கணக்குல கடன் இருக்குதாம் அந்த ஆளுக்கு. தற்கொலை பண்ணிக்கினாரு...''

ரங்காவிற்கு அதிர்ச்சியாக இருந்தது.

மாடியிலிருந்து ராஜேந்திரபாபுவின் உடல் கீழே இறக்கப்படுவதைப் பார்த்தான். கைகளை ஒருவனும் கால்களை ஒருவனும் பிடித்துக் கொள்ள, உயிரில்லாமல் தலை ஆடியது. பாபு!... சொல்லேன். எதற்காகத் தற்கொலை செய்து கொண்டாய்? கடன் தொல்லையா? நிஜமாகவா?

பாபு வாசலில் வந்து நின்ற அரசாங்க 'அமரர் ஊர்தி'யில் ஏற்றப்பட்டான். மாடியிலிருந்து வேறு சிலர் போலீஸ்காரர்களுடன் பேசியபடி இறங்கினார்கள். பாபுவின்



''கோடைக்குப் பயப்படாத நடிகை யார்?''

'' 'ஐஸ்'வர்யா!''

- விஷ்ணம்பேட்டை சங்கரன்



''மாமியாரோட சண்டை போடு முன், 'மூடு' வர என்ன செய்யணும்?''

''அரை மணி நேரம் டீ. வி. பாரு. 'மூடு' தானா வரும்!''

- கு. அருணாசலம்



அணைப்பதே நன்மை!

பாறை
ஒரு தடை அல்ல!
ஓடும் நதி
அதை
தழுவிச் செல்லும்போது!
எதிரிகளை
அணைத்துச் செல் மனிதா!
அவர்கள்
நின்றபடியே இருக்க
நீ வேகமாய் முன்னேறுவாய்!

- பாரதி சந்திரன்



"கேடி ரங்கன்கிட்டே மாமூல் கேட்க பயமா இருக்கு, ஸார்!"

"என்ன விஷயம்?"

"ரொம்ப நச்சரிச்சா பேசாம அரசியலுக்குப் போயிருவேன். அப்புறம் நீங்க எனக்கு மாமூல் தரணும்னு மிரட்டறான்!"

- அம்பை தேவா

நண்பர்களாக இருக்க வேண்டும். ரங்கா காத்திருந்தான். கொஞ்ச நேரத்தில் ஒரு சிலரை மட்டும் அழைத்துக் கொண்டு போலீஸ் ஜீப் கிளம்பியது. அவர்களில் சிலர் சோகமாக விடைபெற்றுக் கொண்டு பிரிய, தனியாக நடந்து சென்ற ஒருவரின் அருகில் சென்ற ரங்கா, ''ஸார்! என் பேரு ரமேஷ். பாபுவைக் கொஞ்ச நாளா கமாரா பழக்கம். விஷயம் கேள்விப்பட்டு ஓடி வர்றேன். என்னங்க ஆச்சு?'' என்றான்.

அவர் கர்சீஃபினால் முகத்தைத் துடைத்துக் கொண்டு, ''பாவங்க. நல்ல பையன். செல்வமா இருந்த குடும்பம். அவங்கப்பா ஃபிலிம் டிஸ்ட்ரிபியூட்டர். ஒரு படம் எடுத்தாரு. 'தலைவன்'னு...''

''தலைவன்! சூர்யாவோட படம்!''

''ஆமாம். பயங்கர ஃப்ளாப். சொத்தெல்லாம் அழிஞ்சு போச்சு. தலைக்கு மேல கடன். சூர்யாகிட்டே உதவி கேக்கப் போய் அவன் அவமானமாப் பேசி அனுப்பிட்டானாம். பாவம், இதே போல அவரும் தற்கொலை பண்ணிக்கிட்டாரு...''

''அடப்பாவமே!''

''எங்க குடும்பம் நாசமானதே அந்தப் படத்துனாலதான்னு அடிக்கடி சொல்லிக்கிட்டிருப்பான். அம்மாவும் தங்கச்சியும் கிராமத்துல வயல் வேலை செய்யறாங்க... எல்லாக் கடனும் இவன் தலைமேல. ஏகப்பட்ட கேஸ். வெளியே தலைகாட்ட முடியலை. ச்... ச்... இப்படிப் பண்ணிப்பான்னு நினைக்கவேயில்லை. நான் வரட்டுங்களா?''

ரங்கா சிலை போல் நின்றான்.

"ஷோ, அவன்தான்" என்றான் மேஜர் சுதாகர்.

"ரொம்ப வலுவான மோட்டிவ் சுதா. மனசுல கறுவிக்கிட்டிருந்திருக்கான். வசதியா இன்ஸ்டிடியூட் வேலை... எதையும் சொல்லாம அமைதியா செத்துப் போயிட்டான்."

"போலீஸ் கையில எதுவும் தடயம் கிடைக்கலையா?"

"ம்ஹூம். துப்புரவா எல்லாத்தையும் அழிச்சிட்டான் போல... லெட்டர்ல வெறும் கடன் தொல்லைன்னு எழுதியிருக்கான்..."

"இனிமேல் எதுவும் செய்ய முடியாது."

"ஒரே ஒரு சான்ஸ். அவன் வேலை செஞ்ச இடத்துல ஸ்டாக் ரிகார்ட் வைச்சிருப்பாங்க. அதன்படி செக் பண்ணிப் பார்த்தா ரேபிஸ் வைரஸ் ட்யூப் ஏதாவது காணாமப் போயிருக்கு தான்னு கண்டுபிடிச்சிடலாம்..." என்றான் ரங்கா.

"வெல், அப்படியே காணாமப் போயிருந்தாலும் அதை இந்த பாபுதான் எடுத்தான்னு எப்படி நிரூபிப்ப? உன் யூகங்களை வைச்சு எதுவும் பண்ண முடியாது."



"நீங்க போட்டிருக்கிற செருப்பு என்ன விலை?"

"இது நான் விலை கொடுத்து வாங்கியதில்லை!"

"தெரியும், நேத்துக் கல்யாணத்திலே எவ்வளவு மொய் எழுதினீங்கன்னு கேட்டேன்!"

- ஆர். ஆர். பூபதி

"அவன்தான் சுதா!" என்றான் ரங்கா.

"மே பி!"

"மஸ்ட் பி!"

"ஆதாரம் இல்லாத வரை 'மே பி'. உண்மை என்னன்னு ரெண்டே ரெண்டு பேருக்குத்தான் தெரியும்."

"ஒண்ணு பாபு. இன்னொண்ணு?"

"அந்தக் குதிரை. மாயக் குதிரை" என்றார் மேஜர் சுதாகர்.

(முற்றும்)

நியூஸ் டைம்

# அபராதம் செலுத்தும் மகாராஜா!

திருவனந்தபுரத்திலுள்ள சில வீடுகளுக்குத் திடீரென்று டெலிபோன் வரும். ஆண்கள் எடுத்தால் 'கட்' ஆகி விடும். பெண்கள் எடுத்தாலோ, ஆபாசமான மொழிகளைத்தான் கேட்க வேண்டிவரும். இது தொடரவே, சம்பந்தப்பட்டவர்கள் டெலிபோன் இலாகாவுக்குப் புகார் செய்தனர். கண்காணிக்க ஆரம்பித்த தொலைபேசித் துறை, அந்த ஆபாசப் பேச்சு எண்களைக் கண்டுபிடித்து, 'இனிமேல் இது போல் உங்கள் போனில் பேசப்பட்டால் உங்கள் டெலிபோன் துண்டிக்கப்படும்' என்று நோட்டீஸ் அனுப்பியது. ஆனாலும் பாவம் டெலிபோன் இலாகா! அந்த ஆபாசப் பேச்சு வந்த டெலிபோன்களில், ஓர் அமைச்சர் வீட்டு டெலிபோனும் உண்டு என்கிற நிலையில், அமைச்சருக்கு எப்படி நோட்டீஸ் அனுப்புவது என்று திண்டாடிக் கொண்டிருக்கிறது!

●● கேரள மாநிலத்தின் உணவு அமைச்சராகப் பொறுப்பேற்ற முஸ்தபா, ஒருவேளை முகம்மதுபின் துக்ளக்கின் வாரிசோ என்று எண்ணத் தோன்றுகிறது. காரணம், ரேஷன் கடை போர்டுகளை விதம் விதமாக மாற்றி மாற்றி எழுதச் சொல்லி இதுவரை எட்டு முறை உத்தர விட்டு விட்டார். ''நிலைமை இப்படியே போனால், ரேஷன் கடை போர்டுகளை மாற்றி எழுதி எழுதியே எங்கள் லாபமெல்லாம் கரைந்து விடும்'' என்று அங்கலாய்க்கிறார்கள் ரேஷன் கடை அதிபர்கள்!

●● இன்றைய கேரளம், திருவிதாங்கூர், கொச்சி, மலபார் என்று மூன்று சமஸ்தானங்களாகத்தான் முன்பு இருந்தது. திருவிதாங்கூர் மகாராஜா மட்டும் தலைநகர் திருவனந்தபுரத்தை விட்டு வெளியே செல்லக் கூடாது என்பது அன்றைய நாளிலிருந்தே கடைப்பிடிக்கப்பட்டு வரும் ஓர் எழுதப்படாத விதி. காரணம் அவர் ஒருநாள் கூட பத்மநாப சுவாமியைத் தரிசனம் செய்யாமல் இருக்கக் கூடாது என்பதுதான். கண்டிப்பாகச் செல்ல வேண்டியிருந்தால், அப்படிச் செல்லும் ஒவ்வொரு நாளுக்கும் 1001 ரூபாய் அபராதமாக பத்மநாபசுவாமி கோயிலுக்குச் செலுத்த வேண்டும். இன்றைய மகாராஜாவான ஸ்ரீமார்த்தாண்ட வர்மா, முதன் முறையாகத் திருவனந்தபுரத்திலிருந்து கோழிக்கோடு செல்கிறார். புதிதாக எழுப்பப்படவிருக்கும் மகா






விஷ்ணு கோயிலின் அடிக்கல் நாட்டு விழாவுக்குத்தான் செல்கிறார் - அதுவும் காலையில் ஹெலிகாப்டரில் புறப்பட்டு மாலையில் திரும்பி வந்து விடுகிறார் - என்றாலும் எழுதாத விதிப்படி அபராதம் செலுத்தப் போகிறார்!

●● நாட்டில் குழப்பங்களும், கலவரங்களும் மண்டியிருந்தாலும் ஜவுளி ஏற்றுமதி, திட்டமிட்ட அளவை விட 13.7% அதிகரித்து சாதனை படைத்திருக்கிறது. தவிர, கைவினைப் பொருள்கள், சணல் மற்றும் தேங்காய் நாரிலிருந்து தயாராகும் பொருள்களுக்கும் கம்பளி ஆடைகளுக்கும், தோல் பொருள்களுக்கும் வெளிநாடுகளில் நல்ல வரவேற்பு. 'வரும் ஆண்டு இலக்கை அதிகரித்து இன்னும் சிறப்பாகச் செயல்பட திட்டமிட்டிருக்கிறோம்' என்று நம்பிக்கையோடு கூறுகிறார் டெக்ஸ்டைல்ஸ்களுக்கான ராஜ்ய அமைச்சர் ஜி. வெங்கடசாமி. ஒவ்வோர் இந்தியனும் அயல்நாடுகளுக்கு ரூ 2339 கடன்பட்டிருக்கிறான் என்னும் போது, ஏற்றுமதி எவ்வளவு முக்கியம் என்பதை அடிக்கோடிட அவசியமில்லை!

●● "தில்லி சிறைகளில் இருக்கும் 8,000 கைதிகள் போதை மருந்துக்கு அடிமையானவர்கள். இவர்களில் அநேகர் சிறைக்கு வருமுன் போதை மருந்துகள் விற்பனையில் ஈடுபட்டிருந்தவர்கள். இவர்களுக்காக விசேஷ மருத்துவ வசதிகள் கொடுப்பதோடு, வீடியோ படங்கள் மூலம் போதை மருந்துகள் விளைவிக்கும் தீங்குகளையும் உணரச் செய்கிறோம். எங்கள் முயற்சிக்கு நல்ல பலன் இருக்கிறது" என்கிறார் திருமதி கிரண்பேடி. இவர் புதிதாக சிறைகளை நிர்வகிக்கும் ஐ.ஜியாக பொறுப்பேற்றிருக்கிறார். போதை மருந்துக்குப் போர்க் கொடி தூக்கியிருக்கும் 'ஆஷியானா' என்னும் இயக்கத்தோடு இணைந்து செயலாற்றுகிறார்.

●● கட்டட பிளானுக்கு அரசின் ஒப்புதல் வாங்காமல் தில்லி டெவலப்மெண்ட் அதாரிட்டிக்குச் சொந்தமான நிலத்தில் 63 கடைகளையும், குடியிருக்க அறைகளையுமாக குப்தா பிராபர்டீஸ் என்ற கம்பெனி கட்டியிருந்த பல மாடிக் கட்டடத்தை இடித்துத் தரைமட்டமாக்கினார் DDA அதிகாரி அல்போன்ஸ்! இதில் வேடிக்கை என்ன வெனில், அப்பகுதி போலீஸ், அல்போன்ஸுடன் ஒத்துழைக்க மறுத்து, விதண்டாவாதம் செய்த போதும், அக் காலனி மக்கள் அவரைப் பெரிதும் ஊக்குவித்ததுதான்! இதன் உட்பொருள் என்ன என்பதைப் புரிந்து கொள்வதில் சிரமமில்லையே!

●● "தமிழ்நாட்டில் நாகர்கோயிலில் நடந்த அனைத்துப் பள்ளிகளின் கூடைப் பந்து போட்டிக்கு தில்லி நிர்வாகத்தின் அலட்சியப் போக்கினால் சம்பந்தப்பட்ட மாணவ, மாணவியர் நேரத்தோடு சென்று கலந்து கொள்ள முடியவில்லை. ரயில்வே ரிசர்வேஷனைத் தக்க சமயத்தில் செய்யத் தவறி விட்டது தில்லி நிர்வாகம். இதனால் தங்களை விமானத்தில் அனுப்ப உத்தரவிட வேண்டும் என்று மாணவ மாணவிகள் தில்லி உயர்நீதி மன்றத்தில் முறையிட, அவ்வாறே ஆணை பிறப்பிக்கப்பட்டது. மாணவ, மாணவியர் தில்லி நிர்வாகத்திற்கு ஒரு பாடம் புகட்டி விட்டார்கள்!

தில்லியிலிருந்து ராஜீவி நரசிம்மன்

திருவனந்தபுரத்திலிருந்து எஸ். எஸ். மணி

# சலவை அளிப்பது-ஸர்ஃப் அல்ட்ரா.




விற்பனையாகும் வாஷிங்மெஷினான விடியோகோனிற்கும், மிகச்சிறந்த மெஷின் பாதுகாப்பு அளிக்கிறது இந்தியாவின் மிகச் சிறந்த டிடர்ஜெண்ட்டான ஸர்ஃப் அல்ட்ரா. எனவே, வெற்றிக் கூட்டணியான உங்கள் விடியோகோன் வாஷிங்மெஷினுடன், ஸர்ஃப் அல்ட்ராவை ஜோடி சேருங்கள். வாழ்நாள் முழுவதும் வெற்றிகர சலவைகளைப் பெற்று மகிழ்ந்திடுங்கள். எனவே, விடியோகோன் அறிவிக்கிறது – சிறந்த சலவை அளிப்பது ஸர்ஃப் அல்ட்ரா.




**ஸர்ஃப் அல்ட்ரா. சிறந்த வாஷிங் மெஷின்களுக்கான சிறந்த டிடர்ஜெண்ட்.**

LINTAS SFX P 1 1926 TM

ஆஹிர்பைரவி ராக ஆலாபனை எழுகிறது. தழைக்கிறது. அறையைச் சுற்றிச் சூழ்கிறது. இழைந்து படர்கிறது. உச்சத்தில் நிலைக்கிறது. ஆகாசத்திலிருந்து அருவியாகக் குதித்துக் கீழே இறங்கி, நொப்பும் நுரையுமாகச் சுழித்துப் பெருகும் நதியாகப் பிரவாகம் கொண்டு, கரை உடைத்துக் கடந்து, பாதாளம் தொட்டு, சின்னச் சுனை நீராகக் குளிர்ந்து, சலனம் நிலைத்து...

சட்டென்று எல்லாம் ஓய்ந்து போனது. யாரோ விளக்கைப் போட்டார்கள். டேப் ரிகார்டரை நிறுத்தினார்கள். முருந்தன் நிமிர்ந்து பார்த்தான்.

''ஒன்பது மணியாகப் போறது... மெஸ்ஸை மூடிட்டா அப்புறம் தாபாவிலே காஞ்சு போன ரொட்டிதான் கதி...''

ஹெல்மெட்டை இடுக்கிக் கொண்டு நிற்கிறான் விக.

''யமன் கல்யாண் கடைசி பாட்டு.. பத்து நிமிஷம்தான் ஆகும்...''

''நீ எமனுக்குக் கல்யாணம் நடத்து.. குபேரனுக்குத் திவசம் கொடு... முதல்லே சாப்பிட வா... பசி வயித்தைக் கிள்ளறது...''

விக மோட்டார் சைக்கிளைக் கிளப்பினான். முருந்தனின் காதில் யமன் கல்யாண் ஒலிக்க, லக்னோவின் அரையிருட்டுத் தெருக்களில் வேகம் கொண்டு நகர்கிறது வண்டி.

# இசை

''திரும்பத் திரும்ப ஏண்டா அந்த வடக்கத்தியான் பாட்டையே கேட்டுட்டு இருக்கே... அர்ஜுன்மிஸ்ரா... அவனும் அவன் குரலும்... கிழட்டு எருமை மாடு ராத்திரியிலே தூக்கம் வராம கத்தற மாதிரி...''

வண்டி ஓட்டிக் கொண்டே விக வம்புக்கு இழுக்கிறான்.

''சங்கீதத்துலே ஏது வடக்கும் தெற்கும்...'' முருந்தன் காதில் யமன் கல்யாண் ஆலாபனை முடிந்து, அடுத்த பாட்டுக்குப் போகும் முன் அர்ஜுன் மிஸ்ரா கேட்கிறார்.

''என்னதான் சொல்லு... இந்துஸ்தானியிலே ஒரு பாட்டு உண்டா... கம்மா வளைக்கக் கட்டி ஸ்வரம் பாடிட்டு, கடைசி அந்த நிமிஷத்துலே ரசிகனுக்குப் போற அவசரத்தோட வாய்பாடு சொல்ற மாதிரி ஒரு பாட்டு...''

இவன் சொன்னானே என்று இரண்டு மாதம் முன்னால் கேரள சமாஜத்தில் கான மேளாவுக்குப் போனது நினைவு வந்தது. 'நல்ல ஒன்னாந்தரம் பரிபாடியாக்கும்...'

தாடி வைத்த ஏழெட்டு இளைஞர்கள் ஒரே மாதிரியான குரலில் ஒரே மாதிரி சோகத்தைப் பரிமாற முயற்சி செய்ய, முருந்தனின் மூடிய கண்களுக்குள் மலையாளப் படக் கதாநாயகன் தழையத் தழைய வேட்டி கட்டிக் கொண்டு, உப்பங்கழி பிரதேசத்தில் நடந்து போய்க் கொண்டே இருந்தான்...

தாடியை மழித்தால் அந்த இளைஞர்கள் சந்தோஷமாகப் பாடக் கூடியவர்களாக இருக்கலாம்...

''ராமச்சந்திரன் கூட இன்னிக்கு சாப்பிட வந்திருக்கான் பாரு... வர்ற மழைக்கு முன்னால திரும்பிடணும்.''

மெஸ்ஸுக்கு முன்னால் நின்ற வெஸ்பாவுக்கும், ராஜ்தூத்துக்கும் நடுவே ஒரு அழுக்கு லாம்பிரெட்டாவைக் காண்பித்தான் விக.

''எத்தனை நாள்தான் பருப்புப் பொடியும், மோரும்னு சுயம்பாகம்... அலுத்திருக்கும் பாவம்...'' முருந்தன் அவன் தோளைப் பிடித்தபடி ஷூ லேசைச் சுழற்றினான்.

ராமச்சந்திரன் எங்கே? வரிசைக் கடைசியில் தெரிவது அவன் தலைதானா?

''போய் ஒட்டிக்கோ போ... ஜய்ஜய்வந்தி, கௌடசாரங்க், பூர்யதனாஸ்ரீ, பூவிக்கற ராஜேஸ்வரின்னு சேப்பங்கிழங்கு கறியோட அசைபோடுங்க ரெண்டு பேரும்...'' விக கையலம்பப் போனான்.

ராமச்சந்திரன் முகவாயில் ரசம் வடிய நிமிர்ந்து பார்த்தான். சட்டைப் பையில் துருத்திக் கொண்டிருக்கிற காஸெட் நிச்சயம் அர்ஜுன் மிஸ்ரா பாட்டுதான்...

கல்யாணமானதையும், சொந்த சமையலையும் தவிர்த்தால் ராமச்சந்திரன் ஏறக்குறைய முருந்தன் வகையறாதான்... இரண்டு பேரும் பதவி உயர்வு பெற்று, தென்திசையிலிருந்து 'வடக்கிருக்க' அனுப்பப்பட்டவர்கள். இரண்டு பேருக்கும் சங்கீதம், அதுவும் அர்ஜுன் மிஸ்ரா...

''இந்தப் பக்கம் மால்கௌன்ஸ்... திருப்பினா கவுடசாரங்க்... அப்புறம் மிஸ்ர பைரவியிலே அம்பா பவானி....'' ராமச்சந்திரன் சட்டைப் பையைத் தட்டிக் காட்டுவதற்குள் காஸெட் முருந்தன் கையில்.

''விகவுக்கு டிரான்ஸ்பர் ஆர்டர் வந்தாச்சா?'' ராமச்சந்திரன் வெளியே வரும்



போது கேட்டான்.

''அடுத்த மாசம் வீட்டைக் காலி பண்ணணும். அதுக்குள்ளே எதிர்பார்க்கிறான்...''

''நீ என்ன செய்யப் போறே அப்புறம்...''

''வேறே வீடு பாக்கணும்... புரோக்கர் குப்தாவைப் பார்த்தா சொல்லியனுப்பு...''

''சேர்ந்தே பாக்கலாம் முருகந்தா... என் வீட்டையும் காலி செய்யச் சொல்றா வீட்டுச் சொந்தக்காரி... ராத்திரி நான் பாட்டுக் கேட்டா உபத்ரவமா இருக்காம்.. அர்ஜுன் மிஸ்ரா பிறந்த இந்த லக்னோவிலே அத்தனை பேரும் அவுரங்கசீப்...''

விக மோட்டார் சைக்கிளைக் கிளப்பிக் கொண்டு காத்திருந்தான்.

தெருக்கோடியில் வந்த டெம்போவைக் கைதட்டி நிறுத்தினான் வீட்டு புரோக்கர் குப்தா. லக்னோவில் மகாநகர் காலனி, ரஹீம் நகர், ஆஷியானா நகர் என்று சந்து பொந்து எல்லாம் எங்கே வீடு காலி,

இரா. முருகன்

என்ன வாடகை என்பதோடு இந்த ஊரில் ஒவ்வொரு அலுவலகத்திலும் அதிகாரிகளுக்கு ரகவாரியாகக் கொடுக்கப்படுகிற குவார்ட்டர்ஸ் வாடகை விவரம் வரை அவனுக்கு அத்துப்படி.

குப்தா ''கோம்திநகர்'' என்றான். கால் மணி நேரம் கழித்து 'உத்தரோ' என்று இறங்கச் சொன்னான். ''சில்லறை இல்லை'' என்று முருகனைப் பான்பராக் வாங்கித் தரச் சொன்னான்.

''இந்தத் தெருவிலே கூட ஒரு வீடு வாடகைக்கு வர்றது...''

முருகனும் ராமச்சந்திரனும் சுவாரசியமில்லாமல் வரிசையாக நின்ற மூன்று நிலைக் கட்டடங்களைப் பார்த்தார்கள்.

''அதோ அங்கே வலப்புறம் மூணாவதாத் தெரியுதே அது பாடகர் அர்ஜுன் மிஸ்ரா வீடு.. அந்த வீட்டுக்கு நேர் எதிர்த்த வீடு...''

முருகன் உடலைச் சிலிர்த்துக் கொண்டான். இங்கேயா? இந்தத் தெருவிலா... ராமச்சந்திரன் கண்களிலும் பரபரப்பு...

லக்னோவுக்கு வந்த நாள் முதல், முருகன் எல்லோரையும் விசாரித்துக் கொண்டிருக்கிறான், அர்ஜுன்மிஸ்ரா வீடு எங்கே

# சிக்கரியும்

சிக்கரி என்பது ஒரு உலர்ந்த வேர். காஃபிக்குப் பதிலான ஒரு எளிய மாற்றாக உலகப்போரின் சமயத்தில் புழக்கத்தில் வந்தது. விரைவில் ஒரு பழக்கமாகி விட்டது. சிக்கரி காஃபிக்கு இணையல்ல.

தோற்றத்தில், மணத்தில், சுவையில் எதிலுமே காஃபிக்கு எள்ளளவும் இணையல்ல.

காஃபி அருந்தியபின் உங்கள் நாவில் சிக்கரியின் சுவை பின்தங்கினால், அது ஒரு சாதாரண காஃபி

# காஃபியும்

என்று நீங்கள் அறிந்து கொள்ளுவீர்.

அப்படியானால் காஃபியுடன் சிக்கரியை சேர்க்கக் காரணம்? அசல் காஃபியின் அருமையான சுவையை கை விடுவானேன்?

அதன் மலிவான விலையினாலா? அல்லது கலப்படமற்ற காஃபியின் அருமையான சுவையை ருசிக்க உங்களுக்கு இது நாள்வரை வாய்ப்பு இல்லாததனாலா?

# ஒன்றல்ல.

# அறிமுகம்

ஆசியாவின் மிகப்பெரியதும், மிகச் சிறந்ததுமான, டாடாவின் குடகு மலைச்சாரல் தோட்டத்திலிருந்து வழங்கும் "கூர்க்". தேர்ந்தெடுத்த காஃபி கொட்டைகளை வறுத்துப் பொடித்து, புத்துணர்ச்சி நறுமணம் குறையாத வண்ணம் உடனடியாக பாக் செய்து அளிக்கப்படுகிறது "கூர்க்". நூற்றுக்கு நூறு கலப்படமற்ற ஃபில்டர் காஃபி. சுவையில் ஒப்பற்றது.

# கலப்படமற்ற

நிறமோ ஆதவனின் உதய நேரச் செம்பொன். சூடாய்ச் சுவைக்கச் சுவைக்கக் கிறங்க வைக்கும் அசல் காஃபிச் சுவை. இந்த அரிய அனுபவத்தை விவரிக்க ஒரே சொல் பொருந்தும்–ஆத்ம திருப்தி.

ஆம். நம் முன்னோர்கள் அசல் காஃபியை அருந்திப் பெற்ற ஆத்ம திருப்தி. இப்போது உங்களுக்கு மீண்டும் அளிக்க வந்துள்ளது டாடாவின் கூர்க் காஃபி.

# காஃபி




டாடாவின் "கூர்க்" காஃபி—அன்றாடம் காலையில் ஆத்ம திருப்தி.

Mudra:CCL:1622:93:TAM

இருக்கிறது என்று. பூல்புலாயாவுக்கும் பேகம் ஹஸ்ரத் மகால் பூங்காவுக்கும் வேண்டுமானால் வழி சொல்ல எல்லோரும் தயாராக இருந்தார்களே தவிர, அர்ஜுன்மிஸ்ரா என்றால் கிலோ என்ன விலை என்று கேட்டார்கள்.

விக கூட ஒரு தடவை 'அர்ஜுன் மிஸ்ரா அக்கவுண்ட் இவங்க பாங்கிலே இருக்கு' என்று யாரையோ அறிமுகம் செய்து வைத்த போது, அந்த பேர்வழி சுவாரசியமில்லாமல் சொன்னான்... 'நானும் பார்த்ததில்லை... அப்பப்ப வெளிநாடு போய்த் திரும்பி வந்ததும் மிஸ்ராவோட சம்ச்சா எவனோ அந்த டாலர், பத்து டாலர் செக் நூறு அம்பதுன்னு அள்ளிட்டு வந்து டெபாசிட் பண்ணுவான்.'



" 'மெட்ராஸில் தண்ணீர் கஷ்டம்... வரவேண்டாம்'னு என் மாமனாருக்கு லெட்டர் போட்டிருந்தேன்."
"என்ன பதில் போட்டிருக்கார்?"
" 'உங்க கஷ்டத்தில் நானும் பங்கெடுத்துக்க விரும்பறேன்'னு போட்டிருக்கார்!"
-விஷ்ணம்பேட்டை சங்கரன்

'ஏண்டா உன் அர்ஜுன்மிஸ்ரா லண்டன்லே பிளாட்பாரத்துலே துண்டை விரிக்கப் போட்டுக் கச்சேரி பண்ணுவானா?' - அப்போது விக கேட்டது இன்னும் வலிக்கிறது.

முகுந்தன் அர்ஜுன்மிஸ்ரா வீட்டை ஒரு பரவசத்தோடு பார்த்தான். அமைதியான வெளிர் நீலம். வளைந்தும் துருத்திக் கொண்டும் பால்கனியும் பர்சாதியும் இல்லாமல் ஒரே சீராக எழும்பி நிற்கிறது. எல்லா ஜன்னலிலும் வெள்ளைத் திரைகள் காற்றில் அலையெழுப்பி மெல்ல அசைகின்றன. இந்தத் தெருவுக்கே இந்த வீடு தான் அழகைத் தருகிறது.

''மேரே அங்க்னே மே...'' காதைத் துளைக்கிற சப்தம். கூட யாரோ சேர்ந்து கர்ணகடூரமாகப் பாடுகிற சத்தம். ஓவென்ற சிரிப்புச் சப்தம். பாத்திரம் கீழே விழுகிற சப்தம். முகுந்தன் வெறுப்போடு நிமிர, சிவப்பும் பச்சையுமாக வர்ணக் கோமாளி போல நின்ற கட்டடத்தில் பார்வை நிலைக்கிறது. அர்ஜுன்மிஸ்ராவுக்கு இப்படி ஒரு பக்கத்து வீடு... வருடத்தில் பாதி நாள் வெளிநாட்டில் இருக்கிறார் என்றால் ஏன் என்று புரிந்த மாதிரி இருந்தது.

''குப்தாஜி உங்களுக்கு அர்ஜுன்மிஸ்ராவைத் தெரியுமா...?'' ராமச்சந்திரன் கேட்டான்.

''தெரியாமல் என்ன? ரெண்டாயிரத்துச் சில்லறை சதுர அடி... மொசைக் தரை... மூணாம் மாடியை சும்மா பூட்டி வைத்திருக்கிறார்... விட்டால் ரெண்டாயிரத்துக்குக் குறையாமல் வரும்...''

குப்தாவுக்கு இரண்டு வகையான மனிதர்களைத்தான் தெரியும். வீட்டு சொந்தக்காரர்கள். வாடகைக்கு வீடு தேடுகிறவர்கள்.

தெரு திரும்பும் போது முகுந்தன் இன்னொரு தடவை அர்ஜுன் மிஸ்ரா வீட்டைப் பார்த்தான். பௌர்ணமி ராத்திரியில் பாடிய சிவரஞ்சனி ராகம் மாதிரி, அந்த அழகும் நளினமும் மனதில் இதமாகப் பதிந்தது.

''இந்தத் தெருவிலே காலியாகிற வீட்டைப் பார்க்கலாமே...'' முகுந்தன் குப்தாவிடம் தைரியமாகக் கேட்டான்.

''பாக்கலாம் சாப்... இன்னும் ரெண்டு மாசம் போனதும்... லீஸ் இன்னும் முடியலே... வாங்க பக்கத்துத் தெருவிலே அமர்க்களமா முதல் மாடி... எண்ணூறு சதுர அடி... மொசைக்... மதறாஸிதான் வேணுமாம்.''

''விஷயம் தெரியுமா?''

மத்தியானம் ஏதோ இன்ஸ்பெக்ஷன் என்று வெளியே போய் விட்டு வந்த விக கேட்டான்.

''என்ன?''

''உன் அர்ஜுன்மிஸ்ரா போய்ட்டான்டா...''

''என்னது?'' கையெழுத்துப் போட்டுக் கொண்டிருந்த வவுச்சரைக் காற்றில் பறக்க விட்டு ஸ்தம்பித்துப் போய் நின்றான் முகுந்தன்.

''நியூயார்க் பிராங்க்பர்ட் பிளைட் லேண்டிங் போது கிராஷ்... ஒருத்தரும் மிஞ்சலை... பாவம்... இப்படியா போகணும்..''

முகுந்தன் மதியம் சாப்பிடவில்லை. ஆபீஸிலிருந்து சீக்கிரமே திரும்பி குப்புறப் படுத்துக் கொண்டு, டேப்ரிகார்டரை சன்னமாகக் காதுக்குப் பக்கத்தில் வைத்துக் கொண்டு, உலகமே முடிந்து போன துயரத்தோடு...

ராத்திரி சாப்பிடக் கூப்பிட்டு அலுத்துப்

போய் விக தனியே கிளம்பி விட்டான். ''என்னமோ சித்தப்பன் பெரியப்பன் போன மாதிரி இழவு காத்துக்கிட்டு...'' திரும்பி வரும் போது நாலு இட்லியைப் பொட்டலமாகக் கட்டி எடுத்து வந்து கொடுத்தான்.

அடுத்த நாள் ஞாயிற்றுக்கிழமை. நினைத்துக் கொண்டு கிளம்பி விட்டான் முகுந்தன். அர்ஜுன்மிஸ்ரா வீட்டை ஒரு தடவை பார்த்து விட்டு வர வேண்டும்... ஒரு அஞ்சலி மாதிரி...

கோம்தி நகரில் மந்திரி எதையோ திறந்து வைக்கிறார் என்று அந்தப் பக்கம் ஒரு வண்டியையும் விட மாட்டேன் என்கிற போலீஸ்காரர்கள்... பைஜாமாவும் தொள தொள ஜிப்பாவுமாக அலைகிற தொண்டர்கள்... ஞாயிற்றுக் கிழமையில் வர வேண்டியிருக்கிற கோபத்தோடும் சலிப்போடும் ஜீப்பில் போகிற அதிகாரிகள்... ஹோ ஹோ வென்று இந்தி சினிமா பாட்டு...

திரும்பி வந்தது. என்ன மனிதர்கள் இவர்கள். ஒரு மகத்தான சோகம் எந்தவிதத்திலும் இந்த ஜென்மங்களைப் பாதிக்கவில்லை... அர்ஜுன்மிஸ்ரா இங்கே ஏன் பிறந்தார்...?

**வி**கவுக்கு வேலை மாற்றல் உத்தரவு வந்தது. ஊருக்குப் போகிற முதல் நாள் அவனும் முகுந்தனும் ராமச்சந்திரனும் சேர்ந்து உட்கார்ந்து சாப்பிட்டார்கள். பேச்சில் அர்ஜுன்மிஸ்ரா வராமல் முகுந்தன் கவனமாகப் பார்த்துக் கொண்டான். அப்படியும் விக விடாமல் கேட்டான் - ''நான் போனதுக்கு அப்புறம் ரெண்டு பேரும் ஒன்னு அழுவீங்களாடா... பேசாம அவன் வீட்டுப் பக்கமே வீடு கிடைச்சா குடியேறிடுங்க... ஜன்மம் சாபல்யம் ஆகும்...''

அவன் வாய்க்குச் சர்க்கரைதான் போட வேண்டும். மறுநாள் காலையில் ராமச்சந்திரன் போன் செய்தான் - ''குப்தா வந்திருக்கான்... கோம்தி நகர்... அதாண்டா அர்ஜுன் மிஸ்ரா வீட்டுப் பக்கம் காலியா இருக்காம். ஒரு வருஷ லீஸ்தானாம்... மூவாயிரம் அட்வான்ஸ்... சரின்னு சொல்லிடலாமா...''

''சொல்லிடு... நாளை சாயந்திரமே நான் மூட்டை முடிச்சோட வந்துடறேன்..''

முகுந்தன் மனதில் இனம்புரியாத சந்தோஷம். அர்ஜுன்மிஸ்ரா நடந்த தெரு. அவர் பழகிய மனிதர்கள். அவர் உயிர் இன்னும் சுற்றிச் சுழல்கிற அமைதியான அந்த வீட்டுக்குப் பக்கத்தில் குடியிருக்க வாய்ப்பு. ராத்திரி முழுக்க பாட்டுக் கேட்க வேண்டும் என்றாலும் சரியென்று உட்காருகிற சிநேகிதன். ராகங்களைப் பற்றி வாய் விட்டுச் சர்ச்சை செய்யவும், சிலாகிக்கவும், தலையாட்டி அனுபவிக்கவும் வாய்ப்பு! குப்தாவுக்கு நன்றி...

**ரா**மச்சந்திரன் சமையல் செய்கிறான். முகுந்தன் கறிகாய் நறுக்குகிறான். அர்ஜுன் மிஸ்ரா தர்பாரி கானடாவில் சஞ்சரித்துக் கொண்டு கூடவே இழைகிறார். வாசலில் காலிங்பெல் சப்தம்.

முகுந்தன் கதவைத் திறக்க, குப்தா, ''சலாம் சாப்'' என்றான்.

அவன் கமிஷனில் ஏழு ரூபாய் ஐம்பது பைசா குறைத்துக் கொடுத்திருக்கிறார்களாம். வாங்கிப் போக பொடிநடையாகக் காததூரம் வந்திருக்கிறான் இந்த ராத்திரியில்.

ராமச்சந்திரன் புளி மணக்கிற கையோடு பணத்தை எண்ணி வைத்தான். குப்தாவை வழியனுப்பப் படி இறங்கி முகுந்தன் கூடவே வந்த பொழுது, எதிர்ச்சாரியி லிருந்து காதைத் துளைக்கிற சப்தத்துடன் இந்தி சினிமாப் பாட்டு. பச்சையும் சிவப்பு மாக நின்ற அந்த வீட்டைப் பார்க்கவே அருவருப்பாக இருந்தது. இங்கே இன்னும் நூறு அர்ஜுன் மிஸ்ராக்கள் பிறந்தாலும் இவர்களின் ரசனை மேம்படப் போவதில்லை.

தன்னிச்சையாக முகுந்தனின் பார்வை அர்ஜுன் மிஸ்ரா வீட்டில் பதிந்தது. அசுத்தங்களின் நடுவே பரிசுத்தமான தேவதை மாதிரி நிசப்தமான அழகோடு நிற்கிற வீடு.

''இப்படி அமைதியான இசைக் கோவில் போல நிக்கற அர்ஜுன்மிஸ்ரா வீட்டுப் பக்கமா இந்த மாதிரி ஒரு சந்தைக் கடை....''

''அதுதான் சாப் அர்ஜுன்மிஸ்ரா வீடு...''

குப்தா கைகாட்டிய வீட்டிலிருந்து அடுத்த சினிமாப் பாட்டு இன்னும் பலமாக ஒலிக்க ஆரம்பித்தது.



● ஹிந்துஸ்தான் லீவர் நிறுவனம் தனது பெண் ஊழியர்களுக்கு இரண்டு வருடம் பிரசவ கால விடுமுறை அளிக்கிறது. பிறந்த குழந்தையைச் சிறப்பாக வளர்த்து, தாயும் தன் உடல் நிலையைக் கவனித்துக் கொள்ளவே இந்த ஏற்பாடு.

- பத்மாஜி

# வளர்ந்துவரும் பிளாக் டிக்

**இது பிளாக்கில் டிக்கெட் வாங்கி சூப்பர் ஸ்டாரைக் கும்பிடுகிற காலம். தியேட்டரில் விற்பதும் வாங்குவதும் ஒரு பெரிய விஷயமாக்கும் என்று யாரும் சாதாரணமாக நினைத்து விட முடியாதபடிக்கு இந்த வியாபாரம் வேர்பிடித்து வளர்ந்து கொண்டிருக்கிறது.**




சென்னை நகரின் பிரதான திரையரங்குகளில் தற்சமயம் கௌண்ட்டரில் டிக்கெட் கொடுக்கும் பழக்கம் கொஞ்சம் கொஞ்சமாய் மறைந்து வருகிறது. நிரந்தரமாக விளக்கு எரியும் ஹவுஸ்ஃபுல் போர்டுக்குப் பின்னால் பல இருட்டு சமாசாரங்கள் நடந்தபடிக்கு இருக்கின்றன.

யாராவது நாலு மாத அழுக்கு தேங்கின லுங்கியும் பஞ்சு மிட்டாய்த் தலையுமாக தியேட்டரைச் சுற்றித் திருட்டு முழி முழிக்கிறார்களா பாருங்கள். அவர்கள் பாக்கெட்டில் ஆயிரம் நாற்காலிகள்!

விஷயம் இதுதான்.

பிளாக்கில் டிக்கெட் விற்பவர்களுக்குக் கிடைக்கும் லாபத்தைத் தினசரி பார்த்துக் கொண்டிருக்கிற தியேட்டர்காரர்களுக்கு ஃபயர் இஞ்சின் வந்தாலும் அணைக்க முடியாதபடிக்கு வயிற்றில் சிவகாசி.

பார்த்தார்கள்! அந்தந்த தியேட்டர்காரர்களே சிலபல அரை பிளேடு தாதாக்களுக்கு 'வேலை போட்டுக் கொடுத்து' அவர்கள் பணி செவ்வனே நடைபெற வழிவகுத்து விட்டார்கள்!

ஆரம்பத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நடந்து வந்த இச் சமாசாரம் இன்று மெட்ராசில் (அநேகமாக) ஒரு தியேட்டர் பாக்கியில்லாமல் நடைபெற்று வருகிறது.

இது குறித்து கிளறிப் பார்த்ததில் பின் வரும் கருத்துக்கள் திரையரங்குகளைச் சார்ந்தவர்கள் மூலம் முன்வைக்கப்படுகின்றன.

1. எப்படி சாராயத்தை ஒழிக்க முடியாதோ அப்படி இதையும் ஒழிக்க முடியாது.

2. தப்பு என்றாலும் 'டப்பு' நிறைய.

3. லாபத்தைப் பங்கிட்டுக் கொள்ள நேர்ந்தாலும் கிடைக்கிற பங்கு, 'நேரடி' வருமானத்தை விடவும் எகிறுகிறது.

4. நூறு படம் ரிலீஸானால் பத்து கூட ஓட மாட்டேன் என்கிறது. கலெக்ஷன் குறைகிற நாட்களில் பட்டினியா கிடக்க முடியும்? எனவே கும்பல் கூடும் போது கொள்ளை அவசியமாகிறது.

அவர்கள் சொல்லாத ஒரு விஷயம், இந்த மாதிரி மேல் வரும்படிக்குக் கணக்கோ, எந்தவிதமான வரியோ கிடையாது; முழுசாக முழுங்கலாம் என்பது!




ஆயுசோடு' உலவியவர்கள் இன்று சர்வ சுதந்திரமுடன், அந்த ஏரியாவின் குட்டி சர்வாதிகாரர்களாக உலவி வருகிறார்கள்.

அவர்களுக்கு மிகவும் சந்தோஷம் தருகிற விஷயம் - கடவுளுக்குக் கூட டிக்கெட் கிடைக்கிறது என்பது! பிளாக்கில் விற்ற பின் ஒப்பந்தப்படி பணத்தைத் தியேட்டரில் கொண்டு போய்க் கட்டினால் போதும்!

அண்ணா சாலையிலுள்ள பாரம்பரியம் மிக்க ஒரு தியேட்டரில் கடந்த எட்டு வருடங்களாக பிளாக்கில் டிக்கெட் விற்கும் ஓர் இளைஞர் சொல்கிறார் :

''எங்க கஷ்டமெல்லாம்(?) போயிடிச்சி சார்! ஒரு போலீஸ்காரன் இப்பல்லாம் கிட்ட வர்றதில்லை. சொல்லப் போனா 'இன்னாடா சௌக்கியமா'ன்னு கேட்டுட்டுப் போறான். தியேட்டர்காரங்க 'இன்ன படம், இத்தனாந் தேதி ரிலீஸ் ஆவப் போகுது. எவ்ளோ வேணும்'னு அவங்களே எங்களாண்ட விசாரிக்கறாங்க. எங்களுக்கும் ஒண்ணும் பிரச்னை இல்லை. கமிஷன் கரெக்டா குடுத்துடுவோம். ரஜினி படம்னா ஒரு ரேட்டு, கமல் படம்னா ஒரு ரேட்டு. கொஞ்ச நாள் முன்ன வரைக்கும் குஷ்பு படம்னா அதுக்குன்னு ஒரு 'ரேட்' இருந்துது.''

**சு**மார் 10 வயது முதல் 60 வயது வரை சகல பருவத்தினரும் இத் துறையில் இருக்கிறார்கள். பெண்களும் விலக்கல்ல.

நமக்குக் கிடைத்த தகவலின்படி சென்னை நகருக்குள் மட்டும் சுமார் 100-150 குடும்பங்கள் இத் 'தொழிலை' நம்பியே இருக்கின்றன. தவிர இவர்களுக்கென்று ரிஜிஸ்தர் பண்ணாத யூனியனே இயங்கி வருகிறது! எழுதி வைக்காத சில விதிமுறைகள் தலைமுறை தலைமுறையாகக் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

பின்வருவன அவைகளில் சில :

1. அவரவர் தமக்கு நிர்ணயிக்கப்பட்ட 'லொக்கேஷனை'த் தாண்டக் கூடாது.



**வி**ற்கிற நபர்களுக்கு இந்த சித்தாந்தமெல்லாம் இல்லை. அவர்களுக்கு இது 'தொழில்'. இருட்டுத்தனமாகச் செய்து கொண்டிருந்த போது 'நித்யகண்டம்; பூர்ண

# ட் விற்பனை!



✱ ஜி. உமாபதி

உதாரணமாக தேவி குரூப்பில் டிக்கெட் விற்பவர், கும்பல் இல்லை என்று பக்கத்து பிளாஸாவுக்கோ அண்ணாவுக்கோ போகக் கூடாது.

2. தியேட்டரில் முதல் மணி அடித்த பிறகே வியாபாரத்தைத் தொடங்க வேண்டும்.

3. எக் காரணம் கொண்டும் நிர்ணயித்த விலையில் பைசா குறைக்கக் கூடாது.

4. புதிதாக யாராவது 'முளைத்தால்' எதிர்க்காதே. 'மாமா'விடம் சொல்லி விடு.

5. ரஜினி படம் தவிர மீதி எதற்கும் 200% ரேட்டுக்கு விற்கக் கூடாது.

யூனியனுக்கென்று 'நலநிதி' வசூலிக்காத குறை!

இவர்கள் பக்கம் இப்படியாக இருக்க, காசு கொடுத்து வாங்கி இவர்களை வாழ வைக்கும் தெய்வங்களான ரசிகப் பெருமக்கள் கருத்து என்ன?

பெருவாரியானவர்களுக்கு இது 'தப்பு' என்கிற எண்ணமெல்லாம் இல்லை. 'ரேஷன்ல பாமாயில் கிடைக்காட்டா கடைல எக்ஸ்ட்ரா விலை கொடுத்து அதே பாமாயில வாங்கிறதில்லையா? அது மாதிரி தான் இதுவும்' என்று சொல்பவர் 150வது நாளில் தேவர்மகன் பார்க்க வந்த ஒரு பெண்!

''கௌண்ட்டர்ல யார் சார் நிக்கறது? நாலு டிக்கெட் குடுத்துட்டு மூடிருவானுங்க. திருட்டுப் பசங்க. பிளாக்குன்னா - விலை அதிகம்னாலும் 'கேரண்ட்டி'யா கிடைச்சிரும். எவ்வளவோ செலவு பண்றோம்... இது பெரிய விஷயமே இல்லை!'' இது ஒரு கல்லூரி மாணவர்.

இப்படி வெட்ட வெளிச்சமாக நடக்கும் சட்டவிரோதம் தவிர்க்க முடியாத விஷயமா?

தொழிலதிபரும், சென்னை ஆனந்த் திரையரங்க உரிமையாளருமான உமாபதியைச் சந்தித்துக் கேட்ட போது :

''படம் பார்க்க வர்ற ஜனங்களுக்கு டிக்கெட் கிடைக்கல்லேன்னா ஒரு வெறி வருது. வந்துட்டு, திரும்பிப் போறதான்னு அதை ஒரு மானப் பிரச்னை மாதிரி எடுத்துக்கறாங்க. அதனால டிக்கெட் கிடைச்சாப் போதும். என்ன விலையானாலும் பரவாயில்லைங்கற மனோபாவத்தை வளத்துக்கறாங்க. அப்புறம் என்ன? இதுக்குன்னே இருக்கறவன் முன்னாடி வந்து 'ச'னு இளிக்கறான். இவங்களும் வாங்கிட்டுப் போயிடறாங்க.''

''இதற்கு இளைஞர்கள்தான் முக்கிய காரணம்னு...''

''கிழவன் கூடத்தான் வாங்கறான். குறிப்பா சொல்லணும்னா அதிகம் வாங்கறது... புதுசா கல்யாணம் ஆனவங்க, ஆகப் போறவங்க, காலேஜ் ஸ்டூடண்ட்ஸ் இவங்கதான்.''

''இப்படி ஒரு காரியம் நடக்கறதைத் தடுக்க வேண்டிய தியேட்டர்காரங்களே இதுக்கு உடந்தையா இருக்கறது தப்பில்லையா?''

''தப்புதான்! யார் இல்லைங்கறாங்க? நான் பண்றதில்லை - அந்த காரியத்தை. வேணும்னா கும்பல் இருக்கறச்சே வந்து பாருங்க. எவனாவது இப்படி விக்கறான்னு தெரிஞ்சா கொம்பால அடிச்சித் துரத்துவேன்.''

''உங்களுக்குன்னு ஒரு யூனியன் இருக்கும். அதுல கூடிப் பேசி இதைத் தடுக்க முயற்சி பண்ணக் கூடாதா?''

''அதெல்லாம் ஒண்ணும் பண்ண முடியாது. நடக்கறது நடந்துக்கிட்டுத்தான் இருக்கும். பட்டுக்கோட்டை பாடினாரு. 'திருடனா பார்த்துத் திருந்தாவிட்டால் திருட்டை ஒழிக்க முடியாது'ன்னு. அது மாதிரி சொல்லித் திருந்தறவங்க இப்ப யாருமே இல்லை!''

''வருமானம் போதுவதில்லை. இது மாதிரி எதாவது வந்தாத்தான் சரிப்படும்னு எல்லாரும் சொல்றாங்க. உங்களுக்கு இப்படியான வருமானம் எதுவும் இல்லைன்னு சொல்றீங்க. எப்படி கட்டுப்படி ஆறது?''

''கஷ்டம்தான்! அதனாலதான் நடுவுல கொஞ்ச நாள் எக்கேடோ கெட்டும்னு மூடிட்டேன். வீட்ல ஒரே நச்சரிப்பு. அதான் மறுபடி திறக்க வேண்டியதாயிடுச்சி. மறுபடியும் அதே பிரச்னை. சரி தமிழ் படமே போடறதில்லைன்னு முடிவு பண்ணி, இங்கிலீஷ் படம் மட்டும்தான் ஓட்றோம். இதுக்கு எப்பவும் சுமாரான ஆடியன்ஸ் உண்டு. நஷ்டம் அதிகம் வர்றதில்லை. ஏதோ போயிட்டிருக்கு!''

உமாபதி விரக்தியில் பேசுகிறார். பிளாக் டிக்கெட் விற்பவர்கள் உற்சாகமாகப் பேசுகிறார்கள். அதனை ஆதரிப்பவர்கள் அதற்கான தன்னிலை விளக்கம் கொடுக்கிறார்கள். மொத்தத்தில் ஒரு சமூகக் குற்றம், சமூக ஒப்புதலோடு ஜாம் ஜாமென்று சூரிய வெளிச்சத்தில் நடந்து கொண்டிருக்கிறது. தொட்டதற்கெல்லாம் ஒரு தடைச் சட்டம் கொண்டு வரும் அரசு, இந்த விஷயத்தை இதுநாள் வரை கண்டு கொண்டதாகவே தெரியவில்லை. அல்லது இது ஒரு 'விஷயமாகவே' அவர்களுக்குப் படவில்லையா என்பதும் புரியவில்லை.

– கிச்சா

வண்ணப்படம் : கோபிநாத்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1993



**முதல் பரிசு ரூ. 1,500**
**இரண்டாவது பரிசு ரூ. 1,000**
**மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்) ரூ 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர பிரசுரத்துக்கு, ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 1 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

# 10

# பனிப் பாறை

தனது கம்பெனியின் நடப்புக் கணக்கு வைத்திருக்கும் வங்கியை நித்யா அடைந்த போது, மணி பத்தடித்துச் சில நிமிடங்களாகி விட்டிருந்தன.

நேராகக் கிளை மேலாளர் பீட்டரின் அறைக்குச் சென்றாள். தான் வந்திருக்கும் விஷயம் குறித்து அவரிடம் பேசினாள். அவள் கூறிய விஷயங்களையெல்லாம் பொறுமையாகக் கேட்ட அவர், அவளை அடுத்த அறையிலிருக்கும் சிறுதொழில் பிரிவு மானேஜரைப் போய்ச் சந்திக்கும்படி பரிவுடன் கூறினார்.

டிவிஷனல் மானேஜர் கார்த்திகேயனை அவள் இதற்கு முன் இரண்டு மூன்று முறை சந்தித்துப் பேசியிருந்ததால், நம்பிக்கையுடன் அவர் முன்பு போய் நின்று கொண்டு ''வணக்கம் சார்'' என்றாள்.

தலையை நிமிர்த்திப் பார்த்த அவர், ஓரிரு நிமிடங்களில் அவளை அடையாளம் கண்டு கொண்டார். ''ஹல்லோ! உட்காருங்க மேடம்,'' என்றார்.

லெட்ஜருடன் வந்த ஒரு கிளார்க்கைச் சற்று நேரம் கழித்து வருமாறு கூறிவிட்டு, அவளைப் பார்த்து, ''சொல்லுங்க மேடம்'' என்றார்.

''மிஸ்டர் கார்த்திகேயன், ஒரு மெஷின் பர்ச்சேஸ் விஷயமாக மானேஜரைப் போய்ப் பார்த்தேன். அவர் உங்களைப் பார்க்குமாறு கூறினார்.''

''என்ன மெஷின்? நான் என்ன செய்ய வேண்டும்?''

''சார் - நான் சொந்தமாக் கம்பெனி தொடங்கி மூணு வருஷமாச்சு. ஓகோன்னு ஓடலைன்னாலும் ரீஸனபிளா லாபத்துல நடக்கறது. ரெண்டு மூன்று காண்டிராட்டுகளை நல்ல பெயர் வரும்படி வெற்றிகரமா முடிச்சுக் குடுத்திருக்கேன். இது வரைக்கும் கட்டட வேலைக்காக சிமெண்ட் மிக்சரை வாடகைக்கு எடுத்துத் தான் உபயோகிச்சிண்டு வந்திருக்கோம். இப்ப 'கன்ஸ்டிரக்ஷன் பூம்' ஏற்பட்டதுல மெஷினுக்கு ஏக டிமாண்ட். யோசிக்கப் பார்த்ததுல, வாடகைக்கு அடிக்கடி மெஷினை எடுக்கறதை விட, சொந்தமாக ஒரு மெஷின் வாங்கினால் என்னன்னு தோணித்து. நீங்க லோன் சேங்ஷன் செய்து உதவினீங்கன்னா ரொம்ப ஹெல்புல்லா இருக்கும் மிஸ்டர் கார்த்திகேயன்.''

அவர் அவளை ஏறிட்டுப் பார்த்தார்.

''ஒன் மினிட் மேடம். நீங்க சொந்தமா மெஷின் வெச்சுக்கிறது சௌகரியம் என்கிறீங்க. பட் அதுல ஒரு சந்தேகம்.''

''கேளுங்க சார்.''

''இப்போ நீங்க ஒரு குறிப்பிட்ட கட்டட வேலை பண்ணிட்டிருக்கீங்க - வெல். ஒரு 'லே மேனா' இந்தக் கேள்வி



ளையக் கேக்கறேன். இந்த வேலை நடக்கிற போது தினப்படி நீங்க இந்த மெஷினை உப யோகிக்க வேண்டிய நிர்ப்பந்தம் இருக் காது, இல்லையா?''

''யூ ஆர் கரெக்ட் சார்.''

''அப்போ, இந்த மிஷின் 'ஐடிலா'க் கிடக்கிற நாட்களெல்லாம் உங்களுக்கு நஷ்டம் தானே?''

''நஷ்டம்னு சொல்ல முடியாது சார். நாங்கள் இப்போ மெஷினை வாடகைக்கு எடுப்பது போல எங்க மெஷினையும் வாட கைக்கு விட்டுடுவோம். அதனால எங் களுக்கு இது ஒரு விதமான 'அஸெட்' கூட.''

''ஐ ஸீ! பரவாயில்லையே'' என்றவர், ''ஜானகிராம்'' என்று கூப்பிட்டார்.

மிகவும் சாதுவான தோற்றமுடைய இளைஞன் ஒருவன் வந்தான்.

# ஆபஸ்தம்பன்

''ஜானகிராம் - போலார் கன்ஸ்டிரக் ஷன்ஸ் பற்றிய லெட்ஜர் வேணும். நடப்புக் கணக்கு, குவிக்'' - என்றார்.

பிறகு நித்யாவைப் பார்த்து, ''ஐ கேன் ஸேங்ஷன் த லோன், ஆனா, ஸெக்யூரிடி ஏதாவது வெச்சிருக்கீங்களா? வீடு, நிலம், சொத்து...ஏதாவது?''

''நோ சார். நான் தனியா இருக்கேன். எனக்கு செக்யூரிடி எதுவும் கிடையாது.''

''ஓகோ! அப்போ உங்களுக்கு செக்யூ ரிடின்னு 'ஸைன்' போட யாராவது இருக் காங்களா? உங்க பிரதரோ, சித்தப்பாவோ, யாராவது?''

ஒரு கணம் மனது விழுந்து விட்டது. சோர்வும் ஆயாசமும் இதயத்தைப் போர்த் தும் வேளையில் பிரசன்னாவின் நினைவு வந்தது.

''என் நண்பர் ஒருவர் எனக்காகக் கையெழுத்துப் போடுவார்,'' என் றாள் சிலிர்ப்புடன்.

''வாட் இஸ் ஹி? எங்க வொர்க் பண்ணறார்?''

அவள் ஒரு பிரபல ஆட்டோ மொபைல் கம்பெனியின் பெயரைக் கூறினாள் - ''அதுல வொர்க்ஸ் மானேஜராக வேலை பார்க்கிறார் சார்.''



''அவருக்கு ஏதாவது சொத்து இருக்கா?''

''எனக்குத் தெரியாது சார்'' என்றவள் திடீரென்று நினைத்துக் கொண்டவள் போல் கேட்டாள் -

''ஏன் சார்? - ஸ்மால் ஸ்கேல் இன்டஸ்டிரீஸ் பிரிவில எங்க கம்பெனி பேர்ல லோன் கொடுக்க முடியாதா?''

ஞானபிரகாசன் லெட்ஜருடன் வந்தான். புரட்டிப் பார்த்தவர், நல்ல பேலன்ஸ் இருப்பதை அறிந்தார்.

''மேடம், உங்க கணக்கு ஸ்டெடியாக உள்ளது. நான் லோன் சேங்ஷன் பண்றேன். எழுபத்தி அஞ்சு சதவிகிதம் தொகை நாங்க குடுக்கலாம். உங்க கணக்கைப் பார்த்தால், மிச்சத் தொகையை உங்களால் கொடுக்க முடியும்னு தெரியறது. ஓகே?''

உள்ளத்தின் மூலையில் திருப்தியின் ஊற்று ஒன்று பெருக்கெடுத்தது.

''ரொம்ப நன்றி சார். நான் தொகையை எப்போ வந்து வாங்கிக்கலாம்?''

''நீங்க அமௌண்டை உடனேயே நேரடியாக வாங்கிக்க முடியாது மேடம். மெஷினை வாங்கப் போற கம்பெனியிலேருந்து 'புரொஃபார்மா இன்வாய்ஸ்' ஒண்ணு வாங்கிட்டு வாங்க. எழுபத்தி அஞ்சு சதவிகிதத் தொகையை நாங்க கம்பெனி பேருல செக்காக எழுதிக் கொடுக்கறோம். மூணு வருடங்களாகக் கம்பெனி நடத்தி வர்றதாகச் சொன்னீங்க, இந்த லோன் சமாசாரத்தில் இத்தனை 'இக்னொரண்டா' இருக்கீங்க?''

நித்யா சிரித்தாள் -

''ஏதோ கொஞ்சம் தெரியும் சார். ஆனால் முழுமையான நடைமுறை விஷயமெல்லாம் தெரியாது. நான் இந்த கடனை எவ்வளவு வருடங்களில் திருப்பிக் கொடுக்கணும்?''

''ஃபைவ் இயர்ஸ்! எல்லா விவரத்தையும் விரிவாக உங்களுக்குச் சொல்லி விடறேன் மிஸ் நித்யா. ஒரு மாசத்துக்குக் கிட்டத்தட்ட நானூறு இல்லை ஐநூறு ரெமிட் பண்ண வேண்டியிருக்கும். ஓகே?''

''ஒரே ஒரு சந்தேகம் மிஸ்டர் கார்த்திகேயன். ஒரு வேளை அந்த வருஷத்துக்கு முன்னாலேயே என்னால் லோனை அடைக்க முடிஞ்சதானா?''

அவர் ஆச்சரியத்துடன் அவளைப் பார்த்தார் -

''உங்க தன்னம்பிக்கையை ரொம்பவும் பாராட்டுகிறேன் மிஸ் நித்யா. சீக்கிரமே லோனை க்ளோஸ் பண்ணிட்டீங்கன்னா ரொம்ப நல்லதுதானே? வெல்.... இன்னும் ரெண்டு மூணு நாளில நானும் ஃபீல்ட் ஆபீசர் ஒருவருமா உங்க கம்பெனி வேலை செய்யற இடத்தைப் பார்க்க வருகிறோம். பிறகு கடனைக் கொடுத்திடறோம்.''

''தாங்க் யூ சார்.''

நன்றி உணர்ச்சியும், தன்னம்பிக்கையும், மனநிறைவும் இதயத்தை லேசாக்க, வீட்டுக்குத் திரும்பினாள்.

அடுத்த ஆறு நாட்கள் அவளும் ஜகன்னாதனும் புதிய மெஷினின் வரவுக்காக அலைந்தார்கள். வங்கி மேலாளர் மிகுந்த திருப்தியுடன் அவள் கட்டியிருந்த சில கட்டடங்களையும் பார்வையிட்டார். சரியாக ஏழாவது நாள் காசோலை கைக்கு வந்தது. கடைசியில் மெஷினும் கைக்கு வந்து சேர்ந்த போது, ஊழியர்கள் அனைவருமே மகிழ்ந்தார்கள். பூஜைக்குக் கார்த்திகேயனும், வங்கி மேலாளர் பீட்டரும் வந்திருந்தார்கள். ராமனோ, துர்காவோ இல்லாத குறையை இவர்களின் அன்பு




●● சென்னையில் தண்ணீர்த் தட்டுப்பாடு எந்த அளவு மோசமாகியுள்ளது என்பதற்கு இதுவும் ஒரு எடுத்துக்காட்டு. மேற்கு மாம்பலம் துரைசாமி சப்வே அருகிலுள்ள பெரியபாளையத்தம்மன் கோவிலின் வெளியே ஒரு பலகையில் 'தயவு செய்து முடிந்தால் அம்மனுக்கு ஒரு குடம் தண்ணீர் கொண்டு வந்து தரவும்' என்று எழுதப்பட்டுள்ளது.

- பத்மாஜி

நிறைந்த பேச்சுக்கள் போக்கில் வைத்தன.

தவிர, பிரசன்னா அருகில் இருப்பது பெரிய பக்கபலமாயிருந்தது. எல்லோருக்கும் இனிப்பும் காரமும் வழங்கினாள். எல்லோரும் சென்ற பிறகு மெஷினை ஷெட்டில் பூட்டி வைத்துக் காவலாளியிடம் சொல்லிக் கொண்டு பிரசன்னாவுடன் புறப்படும் போது மணி ஏழரையாகி விட்டிருந்தது.

அன்று தொலைபேசியில் பேசிய பிறகு, இன்றுதான் பிரசன்னாவை நேருக்கு நேர் சந்திக்க முடிந்தது. மன மகிழ்ச்சியுடன் அவன் முகத்தைப் பார்த்தாள்.

''யு ஆர் கிரேட்!'' என்று சொல்லாமல் சொல்லும் வார்த்தைகளை அவன் பார்வையில் உணர்ந்தாள்.

''உனக்கு ஏதாவது வேலை இருக்கா நித்யா?''

''ஒன்றுமில்லை பிரசன்னா.''

இருவரும் கடல் மணலில் கால்கள் புதையப் புதைய, கடலோரம் சென்று உட்கார்ந்தார்கள். ''எனக்கு மனசு நிறைஞ்சிருக்கு பிரசன்னா. என்ன சொல்ல... எப்படிச் சொல்ல... புரியலை.''

''என்னால புரிஞ்சுக்க முடியறது நித்யா. நம்மை எதிர்க்கிறது மனுஷாளா இருந்தாலும், சூழ்நிலைகளா இருந்தாலும் எதிர்த்துப் போராடற தன்னம்பிக்கையுள்ள மனசு வேணும். இது மட்டும் இருந்துட்டா எந்தப் பிரச்னையையும் சமாளிச்சிடலாம்.''

வானத்தின் கோடியில் நிலவு சின்னதாகச் சரிந்து கொண்டிருந்தது. முன்பனிக் காலம் - காற்று சில்லென்று வீசியது. புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்துக் கொண்டாள். இரு கைகளையும் கோத்துக் கொண்டு வானையே பார்த்தவாறு படுத்துக் கொண்டிருந்தான் பிரசன்னா.

''அன்னைக்கு ஆத்துக்கு வந்திருந்தாயே! ஏன் வந்தோம்னு தோணிப்போச்சா நித்யா?''

அவன் குரல் லேசாகக் கனவு போல் ஒலித்தது.

அவள் அவனைப் பார்த்துத் தெளிவாகக் கூறினாள் - ''இல்லை பிரசன்னா. இதற்கு முன்னாலேயே ஏன் வராமல் போயிட்டோம்னு நெனச்சேன்.''

அவன் வியப்புடன் அவளைப் பார்த்தான். அந்தப் பார்வை உள்ளத்தையும் உடலையும் சிலிர்க்க வைத்தது. புரியாத, புதிய பல உணர்ச்சிகள் நெஞ்சில் ஊஞ்சலாட்டின. அந்தப் பார்வையைத் தவிர்க்க, தன் பார்வையைக் கடலோரம் திருப்பினாள்.

ஓரிரு மழைத்துளிகள் பன்னீராக விழுந்தன. இருவரும் எழுந்தார்கள்.

(தொடரும்)





முப்பத்தொரு பொறுக்கு மணியான சிறுகதைகளை 'அன்று' என்ற தலைப்பில் இரண்டு தொகுதிகளில், அழகான முன்னுரையோடு வழங்கியிருக்கிறார் 'மாலன்'. (ஓரியண்ட் லாங்மன் வெளியீடு, விலை ரூ. 40+35)

மகாகவி பாரதி முதல் சமகால இளந்தலை முறையினர் வரை தொகுப்பாளர் கண்டிப் பார்த்து எடுத்திருப்பது சிறப்பு. நா.பா. - சி.சு. செல்லப்பா போன்ற ஜாம்பவான்கள் விடுபட்டிருப்பது உறுத்தல். 'விடுபடுதல்கள் இந்தத் தொகுப்பை மலினப்படுத்திவிட முடியாது' என்று மாலன் முன்னுரைத்திருப்பதை ஏற்கத்தான் வேண்டும்.

முப்பத்தொரு சிறுகதைகளும், சிந்தனை, வடிவம், நடை எல்லாவற்றிலும் மாறுபடுகிறவை. எனினும் அடிநாதமாக மனிதநேயம் இழையோடுகிற சிந்தனைகள்.

சி. என். அண்ணாதுரை - ஒரு பொருளியல் பட்டதாரியான கதாசிரியர் (அரசியல் அண்ணா'வை மறந்து விடலாம்) எழுதிய 'தனபால செட்டியார் கம்பெனி' சிறு கதையை, மாலனின் முன்னுரைப் பகுதியோடு படிப்பது மெய் சிலிர்க்க வைக்கும் அனுபவம். மென்டலும் குறும்பும் இழையோடும் வரிகளுக்கு மயங்காதவர் இருக்கவே முடியாது.

விமர்சனக் கட்டுரைகளில் மட்டுமே பலர் பார்த்திருக்கக் கூடிய கடவுளும் கந்தசாமிப் பிள்ளையும், கேதாரியின் தாயார், நட்சத்திரக் குழந்தைகள், மங்கை மார்க்கரசியின் காதல் போன்ற அன்றைய ஜாம்பவான்களின் படைப்புகளை இந்தத் தொகுதிகளில் காணும் போது, சிறுகதை இலக்கியத்தின் முழுமையைத் தரிசித்த பரவசம் ஏற்படுகிறது.

ஆ. மாதவையாதான். மாதவையர் என்று எப்படி அங்கே 'ஜாதி' முளைத்தது?

இங்கே வெளியாகியிருக்கும் வண்ணநிலவனின் 'கரையும் உருவங்கள்' இரண்டாம் தொகுதியில் இடம்பெற்றிருக்கிறது.

# கரையும் உருவங்கள்

**த**லையைக் குனிந்தபடியே நடந்து வந்து கொண்டிருந்தான். அந்தத் தெருவில் நடமாட்டம் குறைந்து விட்டது. ஒரு வீட்டுக்குள்ளிருந்து, 'ராதையின் நெஞ்சமே...' கேட்டது. வழக்கமாக எந்த இடத்தில் அந்தப் பாடலைக் கேட்டாலும் நின்று ரசித்துக் கேட்பவன் இன்று நிற்காமல் போகிறான்.

தெருவின் திருப்பத்தில் மட்டும் ஒரு டியூப் லைட் எரிந்து கொண்டிருந்தது. டீக் கடைக்காரன் சாமான்களையெல்லாம் ரொம்பச் சொந்தத்துடன் தெருவில் பரப்பி வைத்துக் கழுவிக் கொண்டிருந்தான்.

'என்ன அண்ணாச்சி... படத்துக்குப் போயிட்டு வார்றீங்களா?'

'இல்லேப்பா...' என்று தேங்கிக் கிடந்த கரித் தண்ணீரைத் தாண்டிக் குதித்தான். செருப்பு அறுந்து விட்டது. இரண்டு நாட்களாகப் பயமுறுத்தி வந்த செருப்பு, இன்று வீட்டுக்கருகில் ஆள் நடமாட்டமற்ற ராத்திரி வேளையில் அறுந்து போனது ஓரளவு நிம்மதியாய் இருந்தது. ஆனாலும் நாளைக்குத் தைக்க வேண்டும். பதினைந்து பைசாவாவது ஆகும்....

குனிந்து அந்தச் செருப்பையும் மற்றொரு செருப்பையும் கழற்றிக் கையில் எடுத்துக் கொள்கையில் மனதுள் பொங்கிய வேதனையை, 'சே' எனக் கூறிக் குறைக்க முயன்றான். பலசரக்குக் கடையின் முன்வால் பலகை பெஞ்ச் காலியாய்க் கிடந்தது. அதிலே கூடப் படுத்து விடலாம். எஸ்.எஸ்.எல்.சி. படிக்காதிருந்தால் ஒருவேளை அதில் படுக்கத் தைரியம் வந்திருக்கக்கூடும்.

தொடர்ந்து நடந்தான்.

வீட்டுக்குள் விடிவிளக்கு மட்டும் எரிந்து கொண்டிருந்தது. அடுப்படியில் விளக்கொளி தெரிகிறது. கதவைத் தட்டக் கூச்சப்பட்டு வெளியே நிற்கிறான். தெரு வாசல் ஜன்னல் இருட்டில் முகம் தெரிகிறது. யாரென்று தெரிகிறதுக்குள் வாசல் கதவு திறந்து கொண்டது. அக்காதான் கதவைத் திறந்தது. அந்த அரை இருட்டில் அவள்

தலையிலிருந்த பிச்சிப்பூவின் வாசனை ரம்மியமாக இருந்தது.

'ஏண்டா ஊமையா வாசல்லே நின்னுக் கிட்டிருக்கே? கதவைத் தட்டினா என்னடா? இவ்வளவு நேரமாச்சே, வெளியே வந்து பார்த்துட்டுப் படுப்போமேன்னு, வாச லுக்கு வந்தேன்... எவ்வளவு நேரமா இப் படி நிக்கிறே?.... ஏண்டா இப்படி ஆயிட்டே.... கதவைத் தட்டினாத்தானே யாரும் திறப்பாங்க... நல்ல புள்ளைடா நீ? சரி.. சரி.. வா.'

திண்ணைக்கு அடியில் குனிந்து, மெது வாக சப்தம் கேட்காமல் செருப்பைக் கீழே வைத்தான். அக்கா கதவைத் தாழ்ப்பாள் போட்ட சப்தத்தில் விழித்துக் கொண்ட



அப்பா தலையைத் தூக்கிப் பார்த்தார்.

'யாரு சங்கரனா? எங்கேடா இவ்வளவு நேரமா சுத்திப்பிட்டு வாரே? காலா காலத் துல வந்து கடனைப் பத்திட்டு படுத்தா என்ன? பொட்டப்புள்ள எம்புட்டு நேரத்துக்குடா முழிச்சிக்கிட்டு இருப்பா?...'

சுவரோடு சுவராய் ஒதுங்கி நின்ற வனைப் பார்த்து 'நீ வாடா' எனக்கூறி உள்ளே போனாள் அக்கா. அடுப்படியைக் கழுவி விட்டிருக்க வேண்டும். இளம் பச்சை வர்ணத்தில் பளபளவென்றிருந்த சில இடங்

வண்ணநிலவன்

களில் ஈரம் காய்ந்து போயிருந்தது. ஒரு சாக்குத் துண்டை விரித்துச் சங்கரனை உட் காரச் சொன்னாள்.

'எனக்குச் சாப்பாடு வேணாம்' என்று நிலைப்படியருகே வந்து சொல்லி விட்டுத் திரும்பிப் போக முயன்றான். அவள் வேக மாக வந்து அவன் கையைப் பிடித்திழுத்து நிறுத்தினாள்.

அவனது முகத்தையே கொஞ்ச நேரத் துக்குப் பார்த்தாள். அவன் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான்.

'எதுக்குடா வேண்டாம்ங்கிறே... வா வந்து சாப்டுட்டுப் படு... பெரிய இவன் மாதிரித்தான்...'

இழுக்காத குறையாக இழுத்து வந்து தோளைப் பிடித்து அமுக்கி, சாக்கின் மீது உட்காரப் பண்ணினாள். தயாராகப் பிசைந்து வைத்திருந்த சாப்பாட்டுத் தட்டை அவன் முன் வைத்து விட்டு சிறிய மரப் பலகையைப் போட்டுக் கொண்டு எதிரே உட்கார்ந்து கொண்டாள்.

அவன் சாப்பிடவில்லை. தட்டையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

'என்னடா பார்த்துக்கிட்டேயிருக்கே... சாப்பிடு...ம்... மத்தியானம் சாப்பிட்டது தானே... சாயந்தரங் காப்பி கூடக் குடிச்சி ருக்க மாட்டியே... சாப்பிடு.'

அவளுடைய அழுத்தமான பிரியத்தை அவனால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. பொங்கி வந்த அழுகை, தொண்டைக் குழி

யில் மரக்கட்டை மாதிரி நடுக்கிக் கொண்டு நின்றது.

பலகையை இழுத்துப் பக்கத்தில் போட்டு உட்கார்ந்து கொண்டாள். 'ம்... கையைக் காட்டு...' சோற்றை உருட்டிக் கையில் போட்டாள்.

'ஒனக்கு மட்டுமாடா வேலையில்லாமே ஊர்ல இருக்கே? எவ்வளவு பிள்ளைகள் வேலையில்லாம உன்னை மாதிரி படிக்கப் போட்டு வீட்ல இருக்கு. வீட்டுக்கு வீடு வாசப்படி. எனக்கும்தான் வயசும், பொழுதும் ஏறிக்கிட்டே போகுது. நான் யார் கிட்டேடா போய் அழட்டும்?... ம் கையை நல்லா விரி, சோறு கீழே சிந்திரப் போகுது... யார் வீட்டுக்கோ வர்ற மாதிரி தயங்கித் தயங்கி வாரே... யார் வீட்லேயோ சாப்பிடுத மாதிரி கூச்சப்படுதே... வாயில் போடு!...'

இன்னும் கொஞ்சம் சோறு கேட்டு வாங்கிச் சாப்பிட்டான். அங்கணத்தில் கை கழுவத் தண்ணீர் ஊற்றினாள்.

'பார்த்துப் போ... இதுகள் கால்மாடும் தலைமாடுமா படுத்துக் கெடக்கும். இந்தா இதெல்லாம் எடுத்து வச்சிட்டு வாரேன். போயிப் படுத்துக்கோ...'

வேட்டியில் கையைத் துடைத்தபடி அறைக்குள் போனவன் விளக்கைப் போட்டான். பெரிய தம்பி புரண்டு படுத்தான். ஊஞ்சல் சப்தம் எழும்பித் தேய்ந்தது. அந்தச் சப்தத்தை அவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து கேட்டு வருகிறான். அது அவனுக்கு ரொம்பப் பிடித்தமான சப்தம். அந்த ஊஞ்சலில் தம்பி, அக்கா, அவன் எல்லோரும் லீவு நாட்களில் பஸ் விளையாட்டு விளையாடுவார்கள். அவன்தான் டிரைவர். கைநிறைய காலண்டர்தாளைக் கிழித்து வைத்திருக்கும் தம்பி கண்டக்டர். ஊஞ்சலை ஓடி ஓடி ஆட்டிவிட்டுக் கடைசியில் ஏறிக் கொள்ளும் போது ஒருமுறை தவறி விழுந்து நெற்றியில் வெட்டி விட்டது. நெற்றித் தழும்புக்கு அவனது கை தானாகவே போயிற்று.

தம்பியின் சிதறிக் கிடந்த புத்தகங்களை எல்லாம் எடுத்து அடுக்கி வைத்தான். நன்றாகப் படிக்கும் தம்பியைக் கஷ்டத்தோடு கஷ்டமாய் அப்பா படிக்க வைக்கிறார். ஆனால், அவனுக்கோ... படிப்புமில்லை, வேலையுமில்லை.

சட்டையைக் கழற்றிக் கொடியில் போட்டான். படுக்கையில் சுவரோரமாகச் சாய்ந்து உட்கார்ந்து கொண்டான். தூங்கப் போவதில்லை. இருந்தாலும் படுத்தே ஆக வேண்டும். இது என்ன கஷ்டம்? வீட்டுக்குள்ளிருக்கவே சங்கடமாக இருந்தது.

அக்கா வந்தாள். அவனுடைய தலைமாட்டில்தான் அவளுக்குப் படுக்கை. 'இன்னும் என்ன யோசனை பண்ணிக்கிட்டிருக்கே! படுக்க வேண்டாமா?' என்றாள்.

பெருமூச்சு விட்டான்.

இவன் தலையணையிலும் அவன் தலையணையிலுமாகச் சேர்ந்து உட்கார்ந்து கொண்டாள். மங்கிய விடிவிளக்கு வெளிச்சத்தில் ரொம்ப அழகாக இருந்தாள். வீட்டில் எல்லாரையும் விட அவள் நல்ல சிவப்புதான். இருந்தும் கல்யாணம் ஆகவில்லை.

'அந்தக் கம்பெனிலே யாரோ உன் ப்ரண்ட் இருக்கான். வேலை விஷயமா வரச் சொன்னான்னு சொன்னியே. பார்த்தியா?'

கொஞ்ச நேரம் பேசாமல் இருந்துவிட்டு மெதுவாகப் பேச ஆரம்பித்தான்.

'பார்த்தேன். நாளன்னைக்கு வரச் சொல்லி விட்டிருக்கான். வழியில, லாலா சத்திர முக்கில் ஆறுமுகத்து மாமாவைப் பார்த்தேன். நாளைக்குத் தாளையூத்துக்கு வா. எங்க சூப்பர்வைசர் கிட்ட சொல்லலாம்னு சொன்னா...'

ரொம்ப பயந்து தாழ்ந்த குரலில் பேசினான்.

'அவுஹ வீட்டுல எல்லாரும் சௌக்கியந்தானா? அவுஹ பையன் வேலையிலே சேர்ந்தாச்சாமே...ம் பின்னே நம்ம அப்பாவை மாதிரியா? இவுஹளுக்கு இருக்கிற செல்வாக்குக்கு யார்கிட்டேயாவது சொல்லி வச்சாக் கிடைக்கும்....'

அந்த மாமாவின் பையனைக் கூட அக்காவுக்குப் பேசி விட்டு, ஒன்றும் நடக்கவில்லை.

'நாளைக்கு நீ தாளையூத்துக்கு எப்பப் போகப் போற?'

## தூண்டில்காரர்கள்!

நாங்கள்
தூண்டில்காரர்கள்.

அலையற்ற
இக்குளத்தோரம்
மிதவைகளில் கண்பதித்துக்
காத்திருக்கும் நாங்கள்
தூண்டில்காரர்கள்.

இந்தக் கூடையைப் போலவே
பசித்திருக்கும்
எங்கள் குடும்பங்களை
மனத்துள் மிதக்கவிட்டுத்
தூண்டிலின்
மிதவைத் துண்டு
மூழ்கும் தருணத்திற்காய்த்
தவமிருக்கும் நாங்கள்
தூண்டில்காரர்கள்.

தூண்டில் முள்ளில்
இரைப்புழுவாய்த் தொங்கும்

எமது பட்டங்களைச்
சட்டை செய்வதில்லை
இக்குளத்து மீன்கள்.

பல்கலைக் கழகத்தின்
மூத்திரைப் புழுக்களைவிடவும்
கரன்சி காகிதத்
தசைத் துணுக்குகளே
அதிகம்
மீன்களைக் கவர்ந்திருக்கின்றன.

சில வைரத் தூண்டில்களின்
மின்னும் ஒளியில்
கவரப்பட்ட
தங்க மீன்கள்
எங்கள் இரும்பு முள்களை
ஏறிட்டும் பார்ப்பதில்லை.

எங்களை
இந்தத் தூண்டில் முள்ளுடன்
மெல்லிய இழையாய்
இணைக்கின்றன
நம்பிக்கை நரம்புகள்.

ஒருநாளில்...
வரும் நாட்களுள் ஒருநாளில்...

இந்நரம்புகள் இணைந்து
ஒரு யாழாய்ப் பரிணமிக்கும்.
அந்த யாழின் மீட்டலில்
அடிபணிந்து
இம் மீன்களே கரையேறிவரும்.

அதுவரை
கரை முழுதும்
நாங்கள் அமர்ந்திருப்போம்
எமது மிதவைகள்மேல் கண்வைத்து.

- அருளமுது



'என்னத்தைப் போகச் சொல்லுரே. அங்கேன்னாப்பலே வேலையை வெச்சுக்கிட்டு காத்திட்டுருக்காஹளாக்கும்.'

'போடா முட்டாள். அந்த மாமா ஒன்னைய மெனக்கெட்டுப் பாத்து கூப்பிட்டிருக்கா; போய்ட்டு வருவியா... ம் பஸ்ஸுக்குக் காசு வைச்சிருக்கியா? நீ காசு இல்லாட்டா சொல்லாம கொள்ளாம நடந்தே கூடப் போயிருவியே...'

'ம் இருக்கு...'

'பொய்... சொல்லாதே.' கொடியில் கிடந்த அவன் சட்டையை உட்கார்ந்த படியே கையை நீட்டி இழுத்தாள். ஒரு ஐந்து பைசா கீழே விழுந்தது. சட்டையில் இருந்து ஒரே வியர்வை வாடை. பைக்குள் கையை விட்டுத் தேடினாள். இரண்டு கசங்கிப் போன பஸ் டிக்கெட்டை எடுத்து வெளியே போட்டாள்.

'எங்கடா காசு வச்சிருக்க! எனக்கு ஒன்னையத் தெரியாதாடா' என்று எழுந்து போய் பீரோவைத் திறந்தாள். அவளுடைய துணிகள் இருந்த தட்டிலிருந்து ஒரு சாக்லெட் டப்பாவை எடுத்தாள். டப்பாவிலிருந்த சின்னக் குங்குமச் சொப்பை எடுத்துக் கொண்டு வெளிச்சத்திற்கு வந்தாள். மடக்கி வைத்திருந்த ஒரு ரூபாய் நோட்டைப் பிரித்து அவனிடம் நீட்டினாள்.

'எதுக்கு அக்கா...' என்று அவளை அண்ணாந்து பார்த்து மெல்லச் சொன்னான்.

'சரிதான்டே.... ரொம்பப் பிகு பண்ணிக்கிடாதேடா...' என்று சொல்லி விட்டுச் சிரித்தாள். மீண்டும் அருகில் வந்து அமர்ந்தவள், சட்டையை எடுத்து கைமடிப்பைப் பிரித்தாள். அவனிடமிருந்து ரூபாயை வாங்கி அந்த மடிப்புக்குள் சுற்றினாள்.

'இன்னைக்குத்தானே இந்தச் சட்டையைப் போட்டே.... அதுக்குள்ளே ஒரே வேர்வையா ஆக்கிட்டு வந்திருக்கியே. சோப்புப் போட்டுக் குளிக்கிறதை ஐயா விட்டாச்சு போலிருக்கு.'

அவளை நேருக்கு நேர் பார்த்தான்.

'எல்லாம் நான் பார்த்துக்கிட்டுத்தானே இருக்கேன். இவ வீட்ல கெடக்கவதானே இவளுக்கு என்ன தெரியும்னு நெனச்சுக்கிட்டு இருக்கியா?... சோப்புப் போட்டுக் குளிக்கறதை விட்டுட்டே.... எல்லாரும் பேஸ்ட் எடுத்து பல்லுத் தேய்க்கிறாங்க. நீ பதினைந்து பைசாவுக்குப் பல்பொடி வாங்கிட்டுத் தேய்க்கே... அம்மாவுக்கு இதெல்லாம் கவனிக்கப் பார்க்கத் தெரியாது... உனக்கு என்னடா வந்திச்சு? வேலை இல்லாமே இருக்கதுக்காக இவ்வளவு ரோஷத்தோட இருக்கணுமாடா? அக்காவைப் பாரு. வீட்டுல உட்கார்ந்து பத்து வருஷம் முடியப் போகுது. எந்த சௌகரியத்தையாவது கொறைச்சிருக்கேனா! ஆனாலும் நீ ரோஷக்காரப் பயடா!' விசும்பலாகக் குறைந்தது குரல்.

சட்டென்று முகத்தை அவள் மடியில் குப்புற வைத்துக் கொண்டு படுத்தான். அவள் அவனுடைய விம்மித் தாழும் முதுகைத் தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

## 21. நதிக்கரையில் புலிக்கொடி



அற்ப புத்தி படைத்தவன், கிடைக்கும் சிறிய வெற்றியையும் பெரிதாக நினைத்துக் கொள்கிறான். வெற்றியால் விளைந்த போதையைத் தலைக்கேற விட்டுத் தலைகால் புரியாமல் நடந்து கொள்கிறான். தர்மமோ, நியாயமோ எதுவும் அவன் கண்களுக்குத் தெரிவதில்லை. நிதான புத்தி படைத்தவனை வெற்றியோ, தோல்வியோ அதிகம் பாதிப்பதில்லை. இரண்டையும் சமமாக எடுத்துக் கொண்டு, அடுத்து செய்ய வேண்டியதைப் பற்றிச் சிந்திக்கிறான். இந்த இருவேறு குண இயல்புகளுக்கு நல்ல உதாரணங்களாக, அந்த மேன்மாடத்து அறையில் நின்றிருந்தனர் ஜெயதுங்கனும் ராஜராஜனும்.

ராஜராஜனிடம் பெரும் ஆக்ரோஷத்துடனும் நிதானமின்றியும் பேசிக் கொண்டே வாளை ஓங்கிய ஜெயதுங்கன் மட்டும் சற்று நிதானமாக புத்தியை இயக்கியிருந்தால், தான் கல்யாணபுரக் கோட்டையைப் பற்றிப் பிரஸ்தாபித்த சமயத்தில் வெளியே கேட்ட சப்தங்களைக் கவனித்திருப்பான். அல்லது ராஜராஜனது கூர்விழிகள், கணப்பொழுது அறையின் வாசல் வழியே வெளியே பார்த்ததையும் அவற்றில் விபரீத ஒளி ஒன்று படர்ந்ததையும் கவனித்திருப்பான்.

ஆனால் நிதானம் என்பதை அறவே

# பாண்டியன் மகள்

இழந்திருந்த ஜெயதுங்கன் இவற்றை உணரவே இல்லை. வாளை ஓங்கிய கணத்தில் "நில் ஜெயதுங்கா" என்று அதிகாரத்துடன் அறையில் ஊடுருவிய குரலைக் கேட்டு, சற்று திடுக்கிட்டுத் திரும்பியவன், அறையின் வாயிலில் உயரமான ஒரு வாலிபன் நிற்பதையும் அவனது நீண்ட வாளையும் சோழச் சின்னங்களையும் கண்டான். யாரிவன்? இத்தனை கட்டுக் காவல்களையும் தாண்டி எப்படி இங்கு வந்தான்? என்ற கேள்வி அவனுள் எழுந்தது.

"டேய் யாரங்கே?" என்று கூவவும் செய்தான்.

அந்த அழைப்புக்கு யாருமே வராததாலும் அதே கணத்தில் கோட்டையின் வாயிற்புறத்தில் எழுந்த பேரொலிகளாலும் கூச்சல்களாலும் அவனது முகத்தில் குழப்பம் விரிந்தது.

"உன் உபதலைவர்களோ காவலர்களோ உன் உதவிக்கு வரும் நிலையில் இல்லை ஜெயதுங்கா!" என்றான் வாயிலில் நின்றவன்.

"என்ன ஆயிற்று அவர்களுக்கு?" என்று இரைந்தவனை நோக்கியபடியே படிகளில் இறங்கிய வாலிபன், "அவர்களைக் கொன்று விட்டேன்" என்று சர்வசாதாரணமாக அறிவித்தான்.

கோபம் தலைக்கேறியதால், ஜெயதுங்கன் தன் பெருத்த சரீரத்தையும் வாளையும் தூக்கிக் கொண்டு அந்த வாலிபனை நோக்கி ஓடினான்.

அப்பொழுதும் இடையில் இருந்த வாளை நாடாத அந்த வாலிபனது வலது கரம் உயர்ந்து, ஜெயதுங்கனைத் தேக்கியது.

"நில் ஜெயதுங்கா! இப்பொழுதும் உனக்கொரு வாய்ப்புத் தருகிறேன். நீ மறைந்திருந்து தாக்கி இளவரசரைச் சிறை செய்ததற்கு மன்னிப்புக் கேட்டுக் கொள். அபராதமாக பின்னாலிருக்கும் ஆயிரம் யானைகளையும் அளித்து விடு. உன்னை உயிருடன் விடுகிறேன். இல்லையெனில் என் சபதப்படி உன்னை இங்கேயே கொன்று விடுவேன்" என்றான் அவன்.



இந்தப் பேச்சால் ஜெயதுங்கனிடம் மிச்சமிருந்த கொஞ்ச நஞ்ச நிதானமும் காற்றில் பறந்து விடவே, தன் பட்டாக்கத்தியை இரு கரங்களாலும் பற்றி உயர்த்தியபடி பெரும் கூச்சலுடன் பாய்ந்தான்.

கண்ணிமைக்கும் நேரத்தில் பக்கவாட்டில் அந்த வாலிபன் ஒதுங்கி விடவே, ஜெயதுங்கன் படிகளில் தடுமாறி விழுந்தான்.

அதே நேரத்தில் இளவரசனை இரண்டே எட்டில் நெருங்கிய வாலிபன், தலையைத் தாழ்த்தி வணங்கி, ''சோழ இளவலுக்கு வணக்கம். நான் அரையன் மதுராந்தகன்'' என்றான்.

இளவல் முகத்திலிருந்த முறுவல் விரிந்தது. அவன் கரம் உயர்ந்து, அரையனின் தோளைப் பற்றியது. ''ஜெயதுங்கன் எழுந்து ஓடி வருகிறான் பார்'' என்றான் ராஜராஜன்.

சரேலென்று திரும்பிய அரையனின் நீண்ட வாள், கண்ணிமைக்கும் நேரத்தில் வெளியே வந்து, உயர்ந்து, ஜெயதுங்கன் வாளைத் தேக்கியது. அடுத்த விநாடி அந்த அறையில் கடுமையான வாட்போர் தொடங்கியது.

விஷ்வக்சேனன்

சாளுக்கிய சோமேஸ்வரனின் மகனான ஜெயதுங்கன், பெரும் குடிகாரனாயிருக்கலாம்; கொலைகாரனாயிருக்கலாம்; யுத்த தர்மத்தையே மதிக்காதவனாயிருக்கலாம். ஆனால் வாட்போரில் மட்டும் அவனிடம் எந்தக் குறையும் இல்லையென்பதையும் வடநாட்டின் சிறந்த வாள்வீரன் என்று அவன் பெயரெடுத்ததற்குக் காரணமிருக்கிறது என்பதையும் அரையன் புரிந்து கொண்டான்.

ஜெயதுங்கனின் வாள் தன் வாளைத் தாக்கியபோதெல்லாம் ஒவ்வொரு அடியும் பெரும் சம்மட்டியால் அடிப்பதைப் போல் இறங்கியதைக் கவனித்த அரையன், இத்தகைய போர் முறையை சமாளிக்கத் தனியே தனக்குப் பயிற்சியளித்த கவிநாராயணபட்டரை நினைத்துக் கொண்டான். தன் பயிற்சிக்குத் தகுந்த வேலை கிடைத்திருக்கிறது என்பது புரிந்ததால் மகிழ்ந்தான். தன் வாளை விட இரு மடங்கு அகலமும் கனமும் கொண்ட ஜெயதுங்கனது வாள் சுழன்ற வகையையும் பாயும் விதத்தையும் போரிட்டவாறே சற்று நேரம் கூர்ந்து கவனித்தவன், பொறி பறக்கத் தன் தாக்குதலைத் தொடங்கினான்.

தடுப்பதற்குக் கூட அவகாசமளிக்காது விரட்டிய அந்த வாளின் வீச்சிலிருந்து தப்ப, ஜெயதுங்கன் அப்படியும் இப்படியுமாகக் குதிக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

கைகளைக் கட்டியபடி நின்று, அந்த வாட்போரை ரசித்துக் கொண்டிருந்த ராஜராஜன் முகத்தில் புன்னகை விரிந்திருப்பதை வீச்சின் ஊடே கண்ட ஜெயதுங்கன், மீண்டும் நிதானத்தை இழந்தான். இரு கைகளினாலும் வாளைப் பிடித்து மேலே ஓங்கியவன், அரையனின் தலை மீது இறக்கினான். இறக்கிய அந்த வாளை தலைக்குச் சற்று மேலே தடுத்த அரையனின் நீண்ட வாள், பின் திடீரென ஜெயதுங்கன் கரங்களை முறித்து விடுவது போல ஒரு சுழற்றுச் சுழற்றியது. ஜெயதுங்கனின் கையிலிருந்த வாள் அறையின் மூலையை நோக்கிப் பறக்க, அதே வினாடியில், அரையனின் வாள் ஜெயதுங்கனது மார்பில் ஆழப் பாய்ந்தது.

பெரும் அலறலுடன் கீழே சாய்ந்த ஜெயதுங்கனின் மார்பிலிருந்து வாளை உருவித் துடைத்தான் அரையன். பின்னர் அது தன் மீது வைத்த ஆணை நிறைவேறிவிட்ட மகிழ்ச்சியுடன் உறைக்குள் புகுந்தது.

ராஜராஜன் முகத்தில் வியப்பு பூரணமாகப் படர்ந்திருந்தது.

''மதுராந்தகா, இத்தகைய வாட்போரை நான் இதுவரை கண்டதில்லை'' என்றான் ராஜராஜன்.

சோழ இளவலின் பாராட்டுதல் விளைவித்த சங்கடத்தை மெல்ல நீக்கிக் கொண்ட அரையன், இளவலை நன்றாக ஏறெடுத்து நோக்கினான். அப்படியே விக்கிரமனின் முகச் சாயலையும் உயரத்தையும் இடமான சரீரத்தையும் பெற்றிருந்த ராஜராஜனிடம், விக்கிரமன் கண்களில் விரியும் கனவுப் பார்வை ஒன்று மட்டும் காணப்படவில்லை. அதற்குரிய பிராயத்தைக் கடந்து விட்டவன் போலும் என்று எண்ணிக் கொண்டான் அரையன்.

தன்னைப் பார்வையால் அலசிய அரையனைக் கண்ட ராஜராஜன் முகத்தில் புன்னகை மலர்ந்தது.

''மதுராந்தகா, கோட்டை வாயிலில் போர் துவங்கி விட்டது. வா செல்வோம்'' என்று அழைத்தான்.

''இல்லை இளவரசே! நாம் யானைகளின் பயிற்சிக்களம் வழியே செல்வதுதான் பாதுகாப்பு, வாருங்கள்!'' என்ற அரையன் முன்னே நடந்தான். கோட்டை வாயிலில் போர் தொடங்கி விட்டிருந்தது.

தரையில் விற்களை நாட்டி, அம்பு

## அருள்வாக்கு

**ஜனங்கள் கொள்கைகளை விட்டு (தனி) மனுஷ்யர்களையே பிடித்துக் கொண்டு நிற்பது ஜாஸ்தியாகி வருகிறது. முதலில் தனி மனுஷ்யரிடம் மோஹம் மாதிரியான பிடிமானம், அதற்கு அப்புறம் ஏதோ ஒரு பார்ட்டி – வ்யூ (கட்சிக் கண்ணோட்டம்)- இது இரண்டுக்கும் மிஞ்சி உண்மைகளை மனஸ் திறந்து உள்ளபடி பார்ப்பது என்பதே அபூர்வமாகி வருகிறது.**

**எப்படிப்பட்ட தனி மனுஷ்யர்களின் பின்னே ஜனங்கள் ஓடுகிறார்களென்று பார்த்தால் யாருக்குக் கவர்ச்சிச் சக்தி இருக்கிறதோ, அவருக்குப் பின்னேதான். ஒருவருக்கு நல்ல அரசியல் ஞானம் இருக்கலாம், தேச நலனுக்கான கொள்கைகளை வகுத்து அவற்றைத் திறம்பட நடத்தி வைக்கிற சக்தி இருக்கலாம், நேர்மையான நடத்தை இருக்கலாம்; இதெல்லாம் அவரிடம் இருந்தாலும் இவற்றில் எதுவுமே இல்லாத இன்னொருவருக்கு நன்றாக ஜோடித்து மேடையிலே பேச முடிகிறது, வசீகரமான பெர்ஸனாலிடி இருக்கிறது என்றால் இவற்றின் கவர்ச்சியிலேயே இவர் விஷயம் தெரிந்த அந்த இன்னொருவரை விட ஜனங்களின் பெரிய ஆதரவைப் பெற்று விடுகிறார். இந்த துர்தசையில்தான் இப்போது தேசமிருப்பதாகத் தெரிகிறது. ஸமூஹத்தின் எல்லா நிலைகளில் உள்ளவர்களுமே இப்படிப்பட்ட கவர்ச்சியில் மயங்கத்தான் செய்கிறார்களென்றாலும், இதிலேயும் விஷயம் தெரியாத பாமர ஜனங்களைத்தான் விசேஷமாக வளைத்து விட முடிகி**

மழை பொழிந்த வில்லாளிகள் அளித்த பாதுகாப்பில், மதிலின் ஓரமாக அரை வட்டமாகச் சுழன்று சுழன்று வந்து மோதிய பாரி வண்டிகளின் பெரும் மரங்கள் கதவைப் பெயர்த்து எறிய, உயர்த்திய வாளுடன் புயலாக உள்ளே நுழைந்தான் காலிங்கராயன். அவனது நீண்ட வாள் காட்டிய சமிக்ஞைகளைப் புரிந்து, கச்சிதமாகவும் வேகமாகவும் பாய்ந்த புரவி வீரர்களாலும், சுவர் ஓரமாகவே நுழைந்து விட்ட காலாட் படையினராலும், நட்ட நடுவில் வரிசையாக விற்களை நிறுத்தி அம்புகளைப் பொழிந்த வில்லாளிகளாலும் உள்ளே குவிக்கப்பட்டிருந்த சாளுக்கியப் படை சிதறியது.

மகாபாரதத்தின் பீமனைப் போல் புரவியிலமர்ந்து, ஜெயந்தனுடனும் சிறு படைப் பிரிவுடனும் ஆற்றின் ஓரமாகவே பின்புற மதிலை அடைந்த உபதலைவர் ஸ்ரீவல்லபர், போர்க்களிறுகளைக் கண்டதும் அகரச் சிரிப்பொன்றை வெளியிட்டார். சோழ இளவலுடன் காத்திருந்த அரையனையும் அவனது நீண்ட வாளையும் கண்டு பிரமித்தவர் அவன் ஜெயதுங்கனை வாட்போரில் வென்றதை அறிந்து சிலாகித்து, "ஆகா, ஆகா" என்று அரையன் முதுகில் பேயறையாக அறைந்து உற்சாகப்பட்டார். அந்த அறையின் வேகம், ஜெயதுங்கன் வாளின் வேகத்தை விட அதிகமாயிருந்ததை உணர்ந்தான் அரையன்.

வெள்ளி முளைக்கு முன் தொடங்கிய நவிலைப் போர், ஆதவன் உதித்த ஒரு ஜாமம் கழித்தே முடிந்தது. நவிலையைக் கைப்பற்றிய அதே வேகத்தில், அளத்தியை நோக்கித் திரும்பிய சோழர் படை, அன்று இரண்டாம் முறையாகப் போரில் இறங்கியது. நவிலை வீழ்ந்ததையும் ஜெயதுங்கன் மடிந்ததையும் அறிந்த சாளுக்கிய விக்கிரமாதித்தன், தன் படைகளுடன் துங்கபத்திராவைத் தாண்டி வேகமாகப் பின்வாங்க ஆரம்பித்தான்.

துங்கபத்திராவின் வெள்ளம் புலிக் கொடியின் படபடப்பைக் கண்டு அஞ்சி, கிழக்கு நோக்கி அதிவேகமாகப் பாய்ந்தது. அலையில் துள்ளிய மீன்களும் கரையில் ஒலித்த வெற்றிச் சிரிப்பைக் கேட்டு, மீண்டும் நீரில் பாய்ந்து மறைந்தன.

கூடாரங்களினூடே நடந்த அரையனின் பார்வை பட்ட இடமெல்லாம் மகிழ்ச்சியும் வெற்றிப் பெருமிதமும் வழிந்தோடின. அன்புடனும் மதிப்புடனும் தன்னை வணங்கிய வீரர்களின் வணக்கத்தைச் சற்று சங்கடத்துடனே ஏற்ற அரையன், அந்தப் பெரும் கூடாரத்தின் வாயிலில் தன்னை வரவேற்க சோழ இளவலே நின்றிருப்பதைக் கண்டு இன்னும் சங்கடப்பட்டான். உள்ளே நுழைந்தவன் முகத்தில் பிரமிப்பு படர்ந்தது.

"வாளுறை கழித்து தோள்வலி காட்டி
போர்ப்பரி நடாத்தி கீர்த்தியை நிறுத்தி
வடதிசை வாகை சூடிய" குலோத்துங்கன் நடுநாயகமாக அமர்ந்திருக்க, பிரதான படைத்தலைவன் காலிங்கராயன் அருகே இருந்தான். அடுத்து கடாரத்தையும் ஸ்ரீவிஜயத்தையும் மண்டியிடச் செய்த கடற்படைத் தலைவன் கருணாகரப் பல்லவன் அமர்ந்திருக்க, அவனை என்றும் பிரியாத அந்த அராபிய உபதலைவனும் ஆஜானுபாகுவாக அருகே நின்றிருந்தான். வெறும் சிரிப்பினாலேயே எதிரிகளை கதிகலங்கச் செய்யும் ஸ்ரீவல்லபரும் மற்ற படைத்தலைவர்களும் சூழ்ந்திருந்த அந்த சபையில் ஏதோ கனவில் நடப்பவனைப் போல் நடந்த அரையன், மன்னரை வணங்கி நிமிர்ந்தான்.

"வா மதுராந்தகா" குரலில் வாத்ஸல்யம் ஒலிக்க, முறுவலுடன் தன்னை வரவேற்ற மன்னரை ஏறெடுத்து நோக்கிய

நது.

சோழர் காலத்தில் உச்சியில் முடியரசு இருந்த போதோ, இதே தேர்தலில் பெர்ஸனாலிடி என்பதே இல்லை, கட்சி என்பதும் இல்லவே இல்லை. தர்மம், தகுதி என்பனவற்றின் மேலான அடிப்படையிலேயே முழுக்க முழுக்கத் தேர்தல் நடந்திருக்கிறது. கான்டிடேட் என்பவன் பெர்ஸனலாக யார், அவன் என்ன பார்ட்டி என்ற பேச்சுக்கே இடமில்லை. அவன் தர்மிஷ்டன், தகுதி வாய்ந்த



வன் என்பதுதான் கவனத்துக்கு வந்திருக்கிறது. இப்படிப்பட்டவர்கள்தான் தங்களுடைய சொந்தக் கவர்ச்சியினால் இல்லாமல், யோக்யதாம்சங்களுக்காக மாத்திரம் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

அரையன் விழிகளில் பக்தியே காணப்பட்டது. மன்னரது கூர்விழிகள் தன் உள்ளத்தையே அலசுவதைக் கண்ட அரையன், தமிழகத்தின் வரலாற்றில் பொன்னேடுகளைப் பொறிக்க வந்த ஒரு மகா வீரரின் சபையில் தனக்கும் இடம் கிடைத்தது முற்பிறவிப் பயனே என்று நினைத்தான். ஸ்ரீவல்லபரை அடுத்து அரையன் அமர்ந்ததும் காலிங்கராயனின் குரல் கணீரென்று அவையை ஊடுருவியது.

''படைத் தலைவர்களே! நமது நெடுநாளைய பகையை வெற்றியுடன் முடித்து அமர்ந்திருக்கிறோம். இதே நேரத்தில் தெற்கே ஒரு பகை உருவாகியிருக்கிறது. கோட்டாற்று மாறவர்மன் நமக்கெதிராகப் படை திரட்டியிருக்கிறான்.''

''மாறவர்மனா? அந்தச் சிறுவனா?'' - அவையிலிருந்து நகைப்புடன் ஒரு குரல் ஏளனத்துடன் ஒலித்தது.

பேச்சு தடைப்பட்டதால் சற்று நிதானித்த படைத்தலைவன் தொடர்ந்தான் : ''ஏளனமாக எண்ண வேண்டாம். மாறவர்மன் ஐந்து பாண்டிய சிற்றரசர்களையும் சேர்த்ததல்லாமல் சேரலாதன் உதவியையும் பெற்றிருக்கிறான். போதாக்குறைக்கு ஈழத்துத் தண்டநாயகனும் இளவரசி அஞ்சனாவுடன் உதவ வந்திருக்கிறான்.''

மெல்ல அனைவரது முகத்திலும் போர் வெறி ஏறத் தொடங்கியது. நிசப்தமான அவையில் கருணாகரப் பல்லவனின் கனமான குரல் ஒலித்தது. ''ஈழத்து இளவரசி எதற்கு?''

''மாறவர்மனுக்கு மணமுடிக்க. அதன் மூலம் ஈழத்து ஆதிக்கத்தை தமிழகத்தில் நிறுவ.''

படைத் தலைவர்கள் முகத்தில் போர் வெறி கொழுந்து விட்டு எரியத் தொடங்கியது. கடற்படைத் தலைவனின் அடுத்த கேள்வி ஒலித்தது. ''மாறவர்மனின் படைபலம் எவ்வளவு?''

காலிங்கராயனின் கூரிய விழிகள் தன் மீது திரும்பியதை உணர்ந்த அரையன் எழுந்து பதிலளித்தான் : ''நான்காயிரம் காலாட்படையும் இரண்டாயிரம் புரவி வீரரும் கோட்டாற்றின் காடுகளில் உறைகின்றனர். மற்ற சிற்றரசர்களின் படைபலம் ஆறாயிரம் பேர். ருத்திர பாண்டியரின் படை இன்னும் இணையவில்லை. சேரலாதனின் இரண்டாயிரம் புரவி வீரர்கள் மலைக் கணவாயின் மறுபுறம் காத்து நிற்கிறார்கள். ஆனால்...''

''ஆனால் என்ன?'' - பரபரப்போடு வினா எழுந்தது.

''ஆனால் தற்போது சேரலாதன் தான் உதவ நினைத்ததில் பாதிப் படையையே அனுப்ப உத்தேசித்திருக்கிறான். ஈழத்துத் தண்டநாயகனது நிலையும் அதுதான்.''

''ஏன்? அவர்கள் மனம் மாறுபடக் காரணம்?''

''இறந்து விட்ட ஜடாவர்ம பாண்டியருக்கு ஒரு மகள் இருப்பது இப்போதுதான் அவர்களுக்குத் தெரிந்தது. எனவே மாறவர்மனது அரசுரிமையில் சந்தேகம் ஏற்பட்டிருக்கிறது.''

''என்ன? என்ன? ஜடாவர்மன் மகள் உயிரோடிருக்கிறாளா? எங்கே? எங்கிருந்தாள்? எப்படித் தெரிந்தது?''

அவையில் பல குரல்கள் வியப்புடன் ஒலித்தன. சற்று தயங்கிய அரையன் பதிலளித்தான் : ''அவள் எங்கிருந்தாள் என்பது தெரியவில்லை. தற்போது உறையூரில் இளவரசர் பாதுகாவலில் இருக்கிறாள்.''

''இது சேரலாதனுக்கும் ஈழத்துத் தண்டநாயகனுக்கும் எப்படித் தெரிந்தது?'' - கருணாகரப் பல்லவன் குரலில் சற்றுக் கடுமை ஒலித்தது.

''சமுத்திரபந்தன் என்ற சோழ ஒற்றன் மூலம்.''

''எதிரிகளிடம் பாண்டியன் மகளைப் பற்றி தெரிவித்த அந்தச் சோழ ஒற்றன் யார்? யார் அந்தத் துரோகி சமுத்திரபந்தன்?'' - பாதி உருவிய வாளுடன் ஆவேசமாக எழுந்து நின்ற ஸ்ரீவல்லபரின் உக்கிரமான குரல் அவையை ஊடுருவியது.

(தொடரும்)





# வெடிக்காத குண்டுகள்



பதினோரு மணிக்கு அந்த அனாமதேய ஃபோன்கால் வந்தது. அந்தச் செய்தி பரவ ஆரம்பித்ததும் அலுவலகம் முழுவதும் பரபரப்பு. ஆண்களும் பெண்களுமாய் அவசர அவசரமாக வெளியே வந்தார்கள்.

வெளியே வந்ததும்தான் வெயிலின் உக்கிரம் புரிந்தது.

''உஸ்... அப்பா... என்ன வெயில்.. என்ன வெயில்... எத்தனை மணிக்கு வெடிக்குமாம். நாம எவ்வளவு தூரம் தள்ளி நிக்கணுமாம்...'' ஹெட்கிளார்க் சுகுமாரன் கேட்டார்.

''தெரியலை. தினம் தினம் இதே வேலையாப் போச்சு. நேத்து ரயில்வே ஸ்டேஷன். முந்தா நாள் ஏர்போர்ட். இன்னிக்கு நம்ம ஆபீஸ்...'' இது ஸ்டெனோ.

''நாட்டில வேலை இல்லாதவங்க நிறைய ஆயிட்டாங்க. சிவனேன்னு நாம வேலை பார்க்க வேண்டியதுதானே. தினசரி இப்படி ஃபோன் வந்தா தினமும் வெயில்ல நிக்க முடியுமா...'' இது ஏ-ஒன் கிளார்க்கின் வாதம்.

''சரிதான் தம்பி. குண்டு வெடிச்சிட்டா உள்ளேயே வெயில் அடிக்குமே...'' சிரிப்பலை பரவியது.

இரண்டு பெரிய நாய்களுடன் போலீஸ் வேன் உள்ளே நுழைந்ததும் பேச்சு நின்று போனது.

நாய்களை இரண்டு பக்கமும் இழுத்துப் போனார்கள்.

மேஜை மேஜையாகச் சுற்றி வந்தார்கள்.

''லதா உன் டிபன் பாக்ஸை எடுத்திட்டியா. அந்தப் புளியோதரை வாசனைல நாய் மயங்கிடக் கூடாது...'' பெண் ஹெட்-கிளார்க் பிரேமா உரிமையுடன் லதாவைக் கிண்டலடித்தாள்.

பெண்களும் ஆண்களும் சேர்ந்து சிரித்தார்கள்.

லதாவால் அந்தக் கிண்டலை ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை.

புதிதாக வேலைக்குச் சேர்ந்து ஆறு மாதம் தான் ஆகிறது.

திருவனந்தபுரத்தில் படித்து வளர்ந்ததால் தமிழின் அத்தனை கிண்டல்களையும் உடனே புரிந்து கொள்ள முடியவில்லை.

இருபத்தியொரு வயது. ஒல்லியான வெள்ளை நிறத் தோல். அழகான முகம்.. என்று எல்லாம் நல்லபடியாக இருந்தாலும், கொஞ்சம் பவர் அதிகமான கண்ணாடியும், சரியாகத் தமிழ் பேசத் தெரியாத தயக்கமும் அவளை மற்றவர்கள் கிண்டல் செய்யும்படி தூண்டின.

மற்றபடி சாதாரணமாக எல்லாரும் நன்றாகத்தான் பழகுகிறார்கள்.

இளம் வயதில் புதிய நிர்வாக அதிகாரியாகப் பொறுப்பு ஏற்றிருக்கும் சந்தோஷ்குமார் கூட அவளிடம் ஃப்ரீயாகத்தான் பேசுகிறான்.

''அவங்க ரெண்டு பேரும் ஒரே ஜாதி. அதான் அப்படி அன்பு வழியுது...'' என்று காது பட பலர் அவளிடம் பேசியிருந்தாலும் அதை அவள் அவன் காதுக்குக் கொண்டு போன தில்லை.

போன வாரம் தியேட்டரில் - எண்ணி நாற்பதே பேர் அமர்ந்து பார்த்த தரமான படம் — அவளைப் பார்த்ததும் சந்தோஷ் அசந்துதான் போனான்.

''லதா, நான் உன்னை இங்கே எதிர்பார்க்கலை. இது ஓர் ஓடாத ஹிந்தி படம். கிளார்க் லெவல்ல இதை ரசிக்க ஆள் இருக்க மாட்டாங்கன்னு நான் கூட லோ க்ளாஸ் டிக்கெட்தான் எடுத்தேன்...'' என்றான் தன் பேச்சின் விபரீதம் புரியாமல்.

லதாவுக்குள் கோபம் விசிறி விடப்பட்டது.

''அது என்ன சார் மனுஷங்க ரசனையை, பார்க்கிற வேலையை வைத்து அளக்கறீங்க. திருவனந்தபுரத்ல தாங்க ரெகுலரா அவார்ட் படங்கள் பார்க்கறவங்க தெரியுமா...?''

''மன்னிக்க வேண்டும்...'' என்றான் சந்தோஷ் நிலைமையை இயல்புக்குக் கொண்டு வர.





''நீங்க ஓங்கி கட்டிண்டு வந்திருக்க றீங்க. ஃப்ரீயா சிகெரெட் பிடிக்கறீங்க. இதெல்லாம் ஸ்டேட்டசுக்குக் குறைச்சல் இல்லையா? ஆள் வர மாட்டாங்கன்னா என்ன வேணா செய்யலாமா? எனக்குப் பிடிக்குது செய்யறேன்னு சொல்லுங்க, ஒத்துக்கறேன். படிப்பு, பதவி எல்லாமே நமக்கு அளிக்கப்பட்ட வேஷம்தான் சார். வெறும் வேஷம்.''

லதாவுக்கே ஆச்சரியமாக இருந்தது. எத்தனை எளிதாக இவனிடம் மட்டும் பேச முடிகிறது.

மறுநாள் அவள் சொன்ன ஸ்டேட்மென்டை டைப் அடித்துக் கொண்டு போய் நீட்டும் போது, தலையை நிமிர்த்தாமல் வாங்கிக் கொண்டான்.

அவளுக்குச் சிரிப்பு வந்தது.

**ம**ரத்து நிழல் சுருங்கிக் கொண்டே வந்தது.

ஆண்கள் நடந்து போய்த் தள்ளி நின்று சிகெரெட் பிடித்து விட்டு வந்தார்கள்.

லதாவுக்கு நா வறட்சியாக இருந்தது. தண்ணீரோ அல்லது ஏதாவது கூல்ட்ரிங்கோ குடித்தால் தேவலை என்று தோன்றியது.

பெண்கள் கூட்டம் சமீபத்தில் வந்த ரஜினி படத்தில் கதாநாயகியின் ஆடை அழகைப் பற்றிப் பேசிக் கொண்டு இருந்தது.

யாரைக் கூப்பிட?

தூரத்தில் சந்தோஷ் யாருடனோ பேசிக் கொண்டிருந்தான்.

சந்தோஷைப் பார்க்க வந்தவராக இருக்கும்.

சிவப்பும் வெள்ளையுமாகப் பெரிய பெரிய கட்டங்கள் போட்ட சட்டை அவன் நிறத்திற்கு எடுப்பாக இருந்தது.

மெதுவாக அந்தப் பக்கம் நடந்து போனாள்.

பேச்சில் அவள் பெயர் அடிபடவே, ஸ்கூட்டர் ஸ்டாண்டின் தூணோரம் நின்று கவனமாகக் கேட்டாள்.

''இந்த இடம்.. உங்களுக்குப் பார்த்து இருக்கறது பெரிய இடம் சந்தோஷ்.''

''சரி...''

''உங்களுக்கும் உங்க ஆபீஸ்ல வேலை பார்க்கற ஒரு கிளார்க்குக்கும் சிநேகம் இருக்கறதாக் கேள்வி. சமீபத்ல தியேட்டர்ல கூட சந்திக்கக்கிட்டதா பெண்ணோட ஒண்ணுவிட்ட மாமா சொன்னார்...'' வந்தவர் கேட்டார்.

நா. நாகராஜன்



"வழக்கமா வாய்ச்சண்டை தான் நடக்கும். நேற்று உனக்கும் உன் மாமி யாருக்கும் கைகலப்பே ஏற்பட்டிருக் காமே?"

"ஆமா! ரெண்டு பேருமே மௌன விரதம்... வேறு என்ன செய்ய...?"

- கு. அருணாசலம்

இவளுக்குப் படபடப்பாக இருந்தது. சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தது கூட சந்தேகப்படும்படியான காட்சியாக மாறுமா...!

சந்தோஷின் பதிலுக்குப் படபடக்கும் இதயத்துடன் காத்திருந்தாள்.

"அட... அது வெறும் நட்புத்தான் சார். போயும் போயும் ஒரு சோடா பாட்டில் கண் ணாடி அழகிதான் என் காதலியா இருக்க ணுமா சார். எனக்கு வர்ற ஆத்திரத்துல அந்த ஒன்னுவிட்ட மாமாவுக்கே ஒன்னு விட லாமான்னு ஆத்திரம் வருது. எத்தனை அழகான பெண்கள் என் கூட நட்போட பழகறாங்க. அதை எல்லாம் விட்டுட்டு இந்த அரை மலையாள சுந்தரிதான் சந்தேகத் துக்குக் காரணமா..." சந்தோஷ்குமார் சப்த மாகச் சிரித்தான்.

அதுவரை உள்ளத்தின் உயர்ந்த இடத் தில் இருந்தவன் சட்டென்று பள்ளத்தை நோக்கிச் சரிந்தான்.

தான் கேட்டதை அவன் கவனிக்க வேண்டும் என்கின்ற ஆசையில், ஒரு குரூர சந்தோஷத்தில், அவள் பக்கத்தில் நின்ற ஸ்கூட்டரின் சீட்டைக் கையால் தட்டி விட்டு நடந்தாள்.

எதேச்சையாகத் திரும்பியவன் பேயைப் பார்த்தவனைப் போல் பார்த் தான். விழித்தான். சிரிப்பு காணாமல் போனது.

தூரத்தில் யாரோ இரண்டு பேர் பேசிக் கொண்டு போனார்கள்.

"என்னய்யா இது. குண்டு குண்டுன்னு சொல்றாங்களே தவிர, வெடிக்க மாட்டேங் குதே எதுவும்..."

"வெடிச்சாச்சு" என்று தனக்குள் சொல் லிக் கொண்டாள் லதா.

---

ளொள் ளொள்! ளொள் ளொள்!

ளொள் ளொள்! ளொள் ளொள்!

ளொள் ளொள்!

ளொள் ளொள்! ளொள் ளொள்!

ஜில்லு! என்ன கலாட்டா! பேசாம உள்ள வா!

ளொள்!

கொஞ்சம் நிம்மதியா 'ஸி.எம்-சவான்' விளையாட்டு விளையாட விடக் கூடாதா?




தங்கள் முன்னேற்றத்தில்
உற்ற தோழன்... 1947 முதல்

- TAG FILE
- LEVER FILE
- CLIP FILE
- FIBRE BOARD FILE

தயாரிப்பாளர்கள்

## MUTHUVEL INDUSTRIES

Angappa Chettiar Industrial Complex,
20.A, Round Road, Post Box No.32,
Dindigul - 624 001. Tamil Nadu.
✆ : 5260 & 7637 R: 5643 & 3726

**டெப்பாசிட்கள் ஏற்றுக் கொள்ளப்படும்**

ஆண்டுக்கு வட்டி விகிதம்

# 24%

குறைந்தபட்ச டெப்பாசிட் : ரூ.1000
குறைந்தபட்ச காலம் : 12 மாதங்கள்
மாதம்தோறும் வட்டி அனுப்பப்படும்.

**CUMULATIVE DEPOSIT**

தங்கள் முதலீட்டை 3 ஆண்டுகளில்
இருமடங்காக பெறுங்கள்

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை ரூ. | வருடாந்திர வரவு சதவிகிதம் |
|---|---|---|
| 12 | 1260 | 26.00 % |
| 24 | 1587 | 29.35 % |
| 36 | 2000 | 33.33 % |
| 48 | 2520 | 38.00 % |
| 60 | 3175 | 43.50 % |

டெப்பாசிட் தொகை: ரூ.1000 அதற்கு மேலும்

VINOD-BODI



எழில் கேசத்தின்
ரகசியம்!




# அஸ்வினி

ஹோமியோ ஹேர் ஆயில்

**புதிய நற்குணங்களுடன் கூடிய சுத்தமான தேங்காய் எண்ணெய் கலந்தது**

- பிசுபிசுப்பற்றது.
- நரைமுடி, மற்றும் முடி உதிர்வதைத் தடுக்கிறது.
- வளமான ஆரோக்கியமான முடி வளரத் தூண்டுகிறது.

இதற்கு மேலும் கூறிட வேண்டுமா...
இன்றே உபயோகித்துப் பாருங்கள்.

**அஸ்வினிக்கு நன்றி!**

வணக்கம். நான் தற்பொழுது தங்களின் அஸ்வினி ஹேர் ஆயிலை பயன்படுத்தி வருகின்றேன். அதை உபயோகித்ததில் இருந்து எனது தலைமுடி மிக நன்றாக வளரத் தொடங்கியுள்ளது. மேலும் ஒருவித உற்சாகத்தை உணர்கின்றேன்.
தங்களது தயாரிப்புக்கு எனது வாழ்த்துக்கள்.

ஹால்ஸ் நாராயணன்
ஸ்ரீ மலர் மெடிக்கல்ஸ், சாயிபாபா காலனி
கோவை 641 011.

தயாரிப்பாளர்:
அஸ்வினி ஹோமியோ பார்மஸி
5-283 A, HPரோடு, மூஸாபேட், ஹைதராபாத் 500 018.

அனைத்து பிரபல கடைகளிலும் கிடைக்கும்.

**விரைவில் எல்லோர் நினைவிலும் நிலைத்து நிற்கும் ஹேர் ஆயில் — அஸ்வினி!**

MAC/1510

# சக்கரவர்த்தித் திருமகன்

## 40. ராம - பரதச் சந்திப்பு

லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட ராமன் மெதுவாகச் சொன்னான்.

இலக்குவ! உலகம்ஓர்
   ஏழும் ஏழும்நீ
கலக்குவை என்பது
   கருதி னால்அது
விலக்குவ(து) அரிது,அது
   விளம்பல் வேண்டுமோ?
புலக்குறித்(து) ஒருபொருள்
   புகலக் கேட்டியால்

இது கம்பர் பாட்டு. வால்மீகியும் இப்படியே சொல்லுகிறார்.

''நீ வெற்றி வீரன். பரதனுடைய பெருஞ் சேனையை நாசமாக்கித் தீர்ப்பாய். அதில் சந்தேகமில்லை. ஆனால் ஒரு விஷயம் யோசிக்க வேண்டியது இருக்கிறது. அதைச் சொல்லுகிறேன், கேள்!'' என்று ஆரம்பித்து, கோபத்தில் லக்ஷ்மணன் விஷயங்களைச் சரியாகக் காணவில்லை என்பதை விளக்கினான்.

''லக்ஷ்மணா! பரதனே நேரில் வருகிறான் என்கிறாய். அப்படியானால் நம்முடைய வில்லுக்கும் அம்புக்கும் கத்திக்கும் என்ன வேலை? தந்தையின் ஆணையை அழித்தும் பரதனைக் கொன்றும் ராஜ்யமும் பழியும் சம்பாதித்து நாம் என்ன பிரயோஜனத்தைப் பெறுவோம்? பந்து மித்திரர்களை அழித்து விட்டுச் சம்பாதிக்கும் சொத்தானது விஷம் கலந்த பணியாரத்தைப் போலாகும். என்னத்துக்காக ராஜ்யம் அல்லது தனம் சம்பாதிக்க விரும்புகிறோம்? யாருக்குச் சுகமும் சந்தோஷமும் தந்து அதனால் நாமும் சந்தோஷம் அடையலாம் என்று சம்பாதிக்கிறோமோ அவர்களை அழித்து விட்டு, அந்தப் பொருளை நாம் அடைவதில் என்ன பயன்? அதர்ம வழியில் சம்பாதிக்கும் ராஜ்யம் நமக்கு வேண்டாம், லக்ஷ்மணா! நீயும், பரதனும், சத்ருக்னனும் என்னுடன் இருந்து அனுபவிக்க முடியாத சுகம் எனக்கு வேண்டாம். இது நிச்சயம்.''

மேலும் சொன்னான் : ''நான் சொல்வதைக் கவனித்துக் கேள். பரதன் இப்போது இங்கே ஏன் வருகிறான் என்பதை நான் அறிவேன். அவன் என்னை வும் தருமம் தவறாதவன். நம்மில் யாருக்காவது அவன் எப்போதாவது தீமை செய்ததுண்டா? ராஜ்யத்தை எனக்குக் கொடுத்து விடுவதற்காகவே அவன் வருகிறான். கைகேயியைக் கோபித்து, தந்தைக்கும் ஏதோ சொல்லிச் சமாதானப்படுத்தி விட்டு, என்னைத் திருப்பி அழைத்துப் போவதற்காகவே வந்திருக்கிறான் என்பது நிச்சயம். பரதனை நான் அறிவேன். நீ அவனைப் பற்றிக் கோபாவேசமாகப் பேசியதெல்லாம் அதருமம். அப்படிப் பேசலாகாது. ராஜ்யத்தைச் சம்பாதிக்கவா ஆசைப்படுகிறாய்? அப்படியானால் சொல். பரதன் வந்ததும் அவனுக்குச் சொல்லுகிறேன், 'லக்ஷ்மணனுக்கு ராஜ்யம் வேண்டுமாம். அவனுக்குக் கொடுத்து விடு' என்று. நான் இப்படிச் சொன்ன மாத்திரத்தில் பார், 'எடுத்துக் கொள்' என்று உனக்கு உடனே தந்து விடுவான், சந்தேகமில்லை'' என்று சொல்லிச் சிரித்தான் ராமன்.

லக்ஷ்மணன் வெட்கத்தால் உடல் குறுகிப் போனான்.

''ஒரு வேளை நம்முடைய தந்தை

சக்கரவர்த்தியே நம்மைப் பார்க்க வந்திருக்கலாம்'' என்றான் லக்ஷ்மணன்.

இத்தனை சேனையும் ஆர்ப்பாட்டமும் யுத்தத்துக்குத்தான் இருக்கும் என்று முதலில் எண்ணினான். ராமன் சொன்னதைக் கேட்டதும், அது அசம்பாவிதம் என்கிற தீர்மானத்துக்கு உடனே வந்தான். மற்று என்ன காரணம் இருக்கக்கூடும் என்று யோசித்து, ஒரு வேளை தசரதனே வந்திருக்கலாம், அவனுடன் இந்தச் சேனையும் பெரும் பரிவாரமும் வருவது சகஜமே என்று சமாதானம் பண்ணிக் கொண்டான்.

தான் பரதனைப் பற்றிப் பேசிய பேச்சுக்கள் தகாதவை என்று உணர்ந்து, வெட்கப்பட்டு இம்மாதிரி தடுமாற்றமாகப் பேசினானோ என்றும் உரையாசிரியர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள்.

லக்ஷ்மணன் வெட்கப்பட்டுப் போனான் என்பதையறிந்த ராமன், ''அப்படியுமிருக்கலாம்! வன வாசத்தில் கஷ்டப்படுகிறோமென்று எண்ணிச் சக்கரவர்த்தி நம்மையும் முக்கியமாக சீதையையும் ஊருக்கு அழைத்துப் போக வந்திருக்கலாம். ஆனால் மன்னனுடைய வெண் கொற்றக் குடையைக் காணவில்லையே? தந்தை வந்திருந்தால் அது இருக்குமே? எப்படியாயினும் சரி, நீ சாந்தமடைவாய்'' என்றான்.

லக்ஷ்மணன், ராமசந்திரன் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அருகே போய்க் கை கூப்பிய வண்ணம் நின்றான்.

சேனையைத் தொலைவில் நிறுத்தி விட்டு, புகை கிளம்பிய இடத்தைச் சரியாகப் பார்த்து வர பரதன் சில ஆட்களை அனுப்பினான். சற்று நேரம் கழித்து அவர்கள் சமாசாரம் கொண்டு வந்தார்கள். அதுவே பரத்வாஜர் குறிப்பிட்ட இடம். அங்கே காணப்படும் பர்ணசாலை ராமனுடைய பர்ணசாலை என்பது நிச்சயம் என்று தெரிந்தவுடன் பரதன் புறப்பட்டான்.

தன்மேல் வந்த பழியை நினைத்து நினைத்துப் பயந்து, இன்னது செய்ய வேண்டியது, இப்படிச் சொல்ல வேண்டியது என்று யோசித்துக் கொண்டே போனவன், ராமன் உட்கார்ந்திருந்ததைப் பார்த்ததும் எல்லாம் மறந்து விட்டான். புல் தரையில் உட்கார்ந்திருந்த ராமனைக் கண்டதும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அண்ணன் இருந்த இடம் நோக்கி ஓடினான்.

துக்கம் மேலிட்டுக் கண்களில் நீர் பெருக, ஒன்றும் பேச முடியாமல் ''அண்ணா!'' என்று கதறிக் கொண்டு ராமன் காலண்டை விழுந்தான். 'அண்ணா' என்ற ஒரு வார்த்தைக்கு மேல் பேச முடியாமல் தொண்டை அடைத்துக் கொள்ள, விம்மி அழுதான்.

இதற்குள் சுமந்திரனும் குகனும் வந்து சேர்ந்தார்கள்.

ஜடையும் மரவுரியும் தரித்துத் தன் முன் கை கூப்பிய வண்ணம் தரையில் விழுந்து கிடந்த பரதனைப் பார்த்தான் ராமன். துக்கத்தாலும் உபவாசத்தாலும் தேகம் மெலிந்து, நிறம் மாறிப் போய்க் கிடந்த பரதனை வாரி யணைத்து, உச்சி மோந்து மடியின் மேல் உட்கார வைத்து, ''குழந்தாய், தந்தை சக்கரவர்த்தியைத் தனியாக விட்டு விட்டு நீ இப்படி வெகு தூரம் வனத்துக்கு வந்துவிடலாமா? ஏன் இந்த மாதிரி இளைத்துப் போயிருக்கிறாய்?'' என்று ராமன் கேட்டான்.

பரதன் பேச்சிழந்து கிடந்தான். பரதனுடைய நிலையைப் பார்த்து ராமன் மெதுவாக, ராஜ்யத்தின் யோக க்ஷேமத்தைப் பற்றி வழக்கப்படி அரச குலத்தவர்கள் சந்திக்கும் சமயங்களில் கேட்பது போல் கேட்டான். கொஞ்ச நேரம் கழித்துச் சமாளித்துக் கொண்டு பரதன் பேசலானான்.

''ராஜ தர்மத்துக்கும் எனக்கும் என்ன சம்பந்தமிருக்கிறது, அண்ணா? சிம்மாசனம் ஏறி ராஜ்ய பரிபாலனம் செய்ய வேண்டியவன் நீ இருக்க, நான் எவ்வாறு அரசனாவேன் அல்லது அரசனுக்குரிய தருமத்தை அனுசரிப்பேன்? எனக்குரிய தருமம் உனக்கு அடிமை செய்வது. அது எனக்குப் பிராப்தமாக வில்லை. மூத்தவன் ராஜ்யப் பொறுப்பைத் தாங்க வேண்டியவன். இது ராஜ குல பொது தருமம். நம்முடைய குலத்திலும்

ராஜாஜி

இதுவே முறை. அயோத்தியைக்கு என்னுடன் வந்து, பட்டம் சூடிக் கொண்டு குலத்துக்கும் ஜனங்களுக்கும் மங்களம் அருள்வாய். மகாராஜாவான தந்தை அவர் செய்ய வேண்டிய வேள்விகளையெல்லாம் செய்து முடித்து, புகழ் பெற்ற மகாவீரர் சுவர்க்கலோகம் புகுந்தார். நான் கேகய தேசத்திலிருக்கும் போதே நீங்கள் அயோத்தியை விட்டு வனம் சென்று விட்டீர்கள். அந்தப் பிரிவின் துக்கத்தைத் தாங்க மாட்டாமல் உயிர் நீத்தார். வருந்ாதே! எழுந்து நம் தந்தைக்குச் செய்ய வேண்டிய கிரியைக் கடனைத் தீர்ப்பாயாக! நானும் சத்ருக்னனும் செய்தாயிற்று. அண்ணா! தந்தைக்கு மிகப் பிரியமாக வளர்ந்தாய். உன் ஞாபகமாகவே தந்தை உயிர் நீத்தார். நீ விட வேண்டிய எள்ளும் நீருமே அவருக்குச் சாந்தி தரும்'' என்று கம்பீரமாகச் சொன்னான்.

**கௌ**சல்யா தேவி, குகன், பரத்வாஜர், இவர்களிடம் பரதன் சொல்ல நேரிட்ட சமாதானங்கள் - - அதாவது நடந்த அனர்த்தங்களில் தனக்கு ஒரு சம்பந்தமுமில்லை என்கிற சமாதானங்கள் -- ராமனிடத்தில் சொல்ல வேண்டிய அவசியமே இருக்கவில்லை. துக்கத்தால் பீடிக்கப்பட்டு, தேகம் மெலிந்து, முகம் வாடி நின்ற அந்த பரதனைப் பார்த்ததே போதுமல்லவா? சமாதானங்களுக்கு அவசியமே இருக்கவில்லை. ராமனை அயோத்தியைக்கு அழைத்துப் போகிற விஷயம் ஒன்றே பரதனுடைய காரியமாக நின்றது. அதையே பேசினான். தன்னைப் பற்றிப் பேசவில்லை.

தந்தை இறந்தார் என்ற சொல்லைக் கேட்டதும் ராமன் கோடாலியால் வெட்டப்பட்ட மரம் போல் கீழே விழுந்தான்.

**நந்தா விளக்கனைய**
**நாயகனே, நானிலத்தோர்**
**தந்தாய், தனியறத்தின்**
**தாயே, தயாநிலையே!**
**எந்தாய், இகல்வேந்தர்**
**ஏறே, இறந்தனையே!**
**அந்தோ இனிவாய்மைக்(கு)**
**ஆருளரே மற்றென்றான்.**

***ரா***ஜகுமாரர்களும் சீதையும் சுமந்திரனுடன் ஆற்றுக்குச் சென்றார்கள். அங்கே ஸ்நானம் செய்து, கை நிறைய ஜலத்தை எடுத்துத் தந்தையைத் தியானித்து ஆற்றில் விட்டான். பிறகு வழக்கப்படி செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்து விட்டு, பர்ணசாலைக்கு வந்து, ராஜ குமாரர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்து நின்று தந்தையை நினைத்துப் பெருங் குரலில் அழுது துக்கம் தீர்த்துக் கொண்டார்கள்.

இவ்விடத்தில் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். பரதன் வந்து ராமனைப் பார்த்த கட்டத்தில் ராமன் பரதனுக்கு உபதேசித்ததாக ஒரு நீண்ட ராஜ தரும உபதேசம் வால்மீகி எழுதியிருக்கிறார். நம்முடைய இதிகாச புராணங்களில் இவ்வாறு ராஜநீதியும், தருமோபதேசமும் அடிக்கடி வரும். தற்காலத்து நூல்களில் ஆசிரியர்கள் முக்கியமாகக் கருதி வருவது நிகழ்ச்சி வேகமும் நாடகத்துக்குரிய வியப்பு, அதிர்ச்சி முதலிய லக்ஷணங்கள். பழைய நூல்களில் இந்த ரஸங்கள் வேண்டியளவு இருந்தாலும் கூடவே மக்களின் சீலத்தை வளர்க்கும் உபதேசங்களும் மத்தியில் தாராளமாகச் சேர்க்கப்பட்டிருக்கும்.

மேலும் இந்தக் கட்டத்தில் வால்மீகி ராமாயண அத்தியாயங்கள் கிரமம் தவறி முன்னும் பின்னுமாக அமைந்து விட்டிருக்கின்றனவென்று பழைய உரை ஆசிரியர்களே கண்டிருக்கிறார்கள். கம்பர் இதையெல்லாம் கவனித்துத் தற்கால ரீதியாகவே ஒழுங்காகப் பாடி விட்டிருக்கிறார். துளசிதாஸருடைய ராமாயணமோ இந்த ராம-பரதச் சந்திப்புக் கட்டத்தில் ஒரே பக்தி சாகரமாக அலைகள் மோதிப் பருவ காலக் கடலைப் போல் பொங்குகிறது. அதில் எந்தச் சிக்கலுக்கும் இடமே இல்லை.

(தொடரும்)




**பீ**ஹார் மாநிலத்தில் லஞ்சம் தலைவிரித்தாடுகிறது. எப்படி? அரசின் தலைமைச் செயலகம் சென்ற ஒருவர் அது காலியாக காட்சியளிக்கவே அங்கிருந்த ப்யூனிடம் என்ன விஷயம் என்று வினவ, ''ஒரு ஐந்து ரூபாய் கொடுங்கள்'' என்று கேட்டு பணம் கைமாறிய பிறகு, ''இன்று அரை நாள்; அதனால்தான் இப்படி'' என்று கூறினாரே பார்க்கலாம்.

- பத்மாஜி



ஐசிஎஸ் R. நடராஜன்
நிர்வாக இயக்குநர்

# ஐசிஎஸ்

## பெனிபிட் பண்ட் லிமிடெட்

221, சத்தியமூர்த்தி சாலை, இராம்நகர்,
கோயமுத்தூர் - 641 009. ☎ 37463




50 ஆண்டுகளுக்கு
மேலான
அரிய சேவை

## டெபாசிட் திட்டங்கள்

| திட்டம் | குறுகிய கால டெபாசிட் | | | மிக்சட் டெபாசிட் திட்டம் | | | |
|---|---|---|---|---|---|---|---|
| காலம் | 1 நாள் முதல் 3 மாதங்கள் | 3 மாதங்கள் முதல் 6 மாதங்கள் | 6 மாதங்கள் முதல் 12 மாதங்கள் | 25 மாதங்களுக்கு | 36 மாதங்களுக்கு | 48 மாதங்களுக்கு | 60 மாதங்களுக்கு |
| வட்டி விகிதம் ஆண்டுக்கு | 15% | 16% | 17% | 18.5% | 19% | 19.5% | 20% |
| வாடிக்கையாளர் வசதிக்கேற்ப 1 மாதம், 3 மாதம் மற்றும் 6 மாத கால இடைவெளிகளிலும் வட்டி விகிதம் வழங்கப்படும். | | வழங்கும் வட்டி விகிதங்கள் | ஆண்டுக்கு ஒருமுறை | 18.5% | 19% | 19.5% | 20% |
| | | | 6 மாதத்திற்கு ஒருமுறை | 17.5% | 18% | 18.5% | 19% |
| | | | 3 மாதம் அல்லது மாதத்திற்கு ஒருமுறை | 16.5% | 17% | 17.5% | 18% |

### குமுலேடிவ் டெபாசிட் திட்டம்

- 45 மாதங்களில் இரு மடங்கு
- 68 மாதங்களில் மூன்று மடங்கு
- 90 மாதங்களில் நான்கு மடங்கு

| டெபாசிட் தொகை ரூ. | முதிர்வு அடையும்போது பெறும் தொகை | | |
|---|---|---|---|
| | 45 மாதங்கள் | 68 மாதங்கள் | 90 மாதங்கள் |
| 1000 | 2000 | 3000 | 4000 |
| 5000 | 10000 | 15000 | 20000 |
| 7500 | 15000 | 22500 | 30000 |
| 10000 | 20000 | 30000 | 40000 |

### கவிட்சம் வைப்புத் திட்டம்

**ரூ. 10,000/- = ரூ. 21,000/-** (45 மாதங்களில்)

இத்திட்டத்தில் ரூ.10,000/- செலுத்தி 45 மாதங்களில் ரூ.21,000/- பெறுவீர்!
உங்களுக்கு கிடைப்பதோ இரட்டிப்பு ஆதாயத்துடன் ஓர் ஆயிரம்!
இத்திட்டத்தில் ரூ.10,000/-ம் அதன் மடங்கில் பணம் செலுத்துவோர் மட்டுமே பங்கு பெற முடியும்.

### ரெக்கரிங் டெபாசிட் திட்டம்

| மாத தவணைத் தொகை ரூ. | காலக்கெடுவில் பெறவுள்ள முதிர்வுத் தொகை | | | | |
|---|---|---|---|---|---|
| | 12 மாதங்கள் | 24 மாதங்கள் | 36 மாதங்கள் | 48 மாதங்கள் | 60 மாதங்கள் |
| 100 | 1320 | 2880 | 4720 | 6480 | 10040 |
| 250 | 3300 | 7200 | 11800 | 16200 | 25100 |
| 500 | 6600 | 14400 | 23600 | 32400 | 50200 |

ரூ.5 செலுத்தி உறுப்பினராகி பயன் பெறுவீர்! செழுமை தரும் சேமிப்புத் திட்டங்கள்!
ஐஸ்வர்யத்தின் அட்சயபாத்திரம் ஐசிஎஸ்!

# முத்தான மூன்று குழந்தைகள்

**ஆ**ண், பெண் என்ற பேதத்தைப் புகுத்தாமல்தான் என் குழந்தைகளை வளர்த்தேன்.

மூத்த பெண் யக்ஞா நன்றாகப் படிப்பாள். நான் இளமையில் இருந்தது போலவே தோற்றமும் சுபாவமும் கொண்டவளாக இருந்தாள். அவளை நான் என்று நினைத்துப் பல பேர் பேசியும், வாழ்த்தியும் ஆட்டோகிராஃப் கேட்டதுண்டு! அவளும் அவர்கள் கேள்விகளுக்குத் தகுந்த பதில்கள் கூறி என்னைப் போல் ஆட்டோகிராஃபும் போட்டுக் கொடுத்து விடுவாள்! கடைசியாக விடை பெறும் சமயத்தில் ''நான் சௌகார் இல்லை; அவருடைய மகள் யக்ஞா!'' என்று குட்டை உடைத்து விட்டுக் கலகலவென்று சிரிப்பாள்.

இத்தகைய சம்பவங்கள் ஒரு குறிப்பிட்ட காலகட்டத்தில் பல முறை நடந்தன.

எனக்குப் பதினைந்து வயதில் கல்யாணம். யக்ஞாவுக்கும் பதினாறு வயதில் திருமணம் செய்து வைத்து விட்டேன். அவள் பள்ளிப் படிப்பு முடிக்கும் சமயத்திலேயே நல்ல வரனாக அமைந்துவிட்டது. இதனால் சீக்கிரமே பாட்டியும் ஆகிவிட்டேன். யக்ஞாவின் மகள் வைஷ்ணவியும் அவள் அம்மா ஜாடையாகவே இருக்கிறாள். நாங்கள் பாட்டியும் பேத்தியும் போலவே பழகுவதில்லை. நெருங்கிய தோழிகள் போல் பழகுகிறோம். 'ஜானு' என்றுதான் என்னைக் கூப்பிடுவாள் வைஷ்ணவி. மற்றவர்களுக்கு அது விநோதமாகத் தோன்றினாலும் எனக்கு அவளிடம் நெருக்கத்தை ஏற்படுத்துகிறது..

வைஷ்ணவிக்கும் எனக்கும் மற்றொரு ஒற்றுமையும் இருக்கிறது. என்னைப் போலவே அவளும் சினிமா மூலம் பிரபலமான பின்னர், நாடக மேடைக்குச் சென்றிருக்கிறாள். பாலசந்தர் மூலம் எனக்குக் கிடைத்த மேடைப் பிரவேசம் ஒய்.ஜி. மகேந்திரன், வெண்ணிற ஆடை மூர்த்தி மூலம் அவளுக்குக் கிடைத்திருக்கிறது. தரமான, நவீன நாடகங்களில் நடிக்க வாய்ப்புகள் கிடைத்தால் விடக்கூடாது என்பது அவளுடைய விருப்பம். இதில் எனக்கும் மகிழ்ச்சி.

**வை**ஷ்ணவிக்கு தேவி பிரசாத் என்று ஒரு மூத்த சகோதரன். அமெரிக்காவில் எம்.எஸ். படித்துக் கொண்டிருக்கிறான். என்னுடைய முதல் பேரக் குழந்தை என்பதால் அவனுக்குச் சிறு வயதில் ஏகப்பட்ட செல்லம், சலுகை. எந்த வெளிநாட்டுக்குப் போய் வந்தாலும், மிக அரிய நவீனமான விளையாட்டுப் பொருட்களை அவனுக்காக நான் வாங்கி வரத் தவறியதில்லை. அவற்றை இரண்டாம் நாளே உடைத்து விடுவான் என்பது வேறு விஷயம்.

வைஷ்ணவி, தேவிப் பிரசாதுக்கு நேர் எதிர். விளையாட்டுப் பொம்மைகளை விட அவள் அதிகம் விரும்பியது புத்தகங்களைத்தான். எளிமையான உடைகள் போதும். நகைகளோ சுத்தமாய்ப் பிடிக்காது. இன்று சினிமாவில் நிறைய நகை அணிந்து கொண்டு, தலை நிறைய பூ, மிகையான மேக்கப்புடன் நடிப்பதைப் பார்க்கும் போது, 'என் பேத்தி வைஷ்ணவா இது?' என்று ஆச்சரியப்படுவேன்.

என் பெரிய மாப்பிள்ளை டாக்டர் உதய பானு பற்றிச் சில வார்த்தைகள்.... இருபத்தி இரண்டு வருடங்கள் குஜராத்தில் உள்ள இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் நிறுவனத்தில் விஞ்ஞானியாய்ப் பணி புரிந்தவர். எளிய குடும்பப் பின்னணியைக் கொண்டிருந்தாலும், அவருடைய புத்திசாலித்தனமும், உயர்ந்த கல்வியும்தான், யக்ஞாவுக்கு நான் அவரைத் தேர்ந்தெடுக்கக் காரணம். இளம் வயதிலேயே தாயை இழந்தவர். அவரை என் மாப்பிள்ளை என்பதைவிட மகனாகவே பாவிக்கிறேன். அவரும் தனக்கொரு நல்ல தாய் கிடைத்திருப்பதாகக் கருதுகிறார். அவருடைய மொழி வளமும், அழகான கையெழுத்தும், அபாரமானவை.

**என்** மகன் வெங்கட்ரமணா சாதுதான் என்றாலும் சிறு வயதில் அவன் ஏதாவது தப்புச் செய்தால் வன்மையாகக் கண்டிக்க முடியாது. காரணம் அவன் ரொம்ப சீக்கிரம் உணர்ச்சிவசப்பட்டு விடுவான்.

ஒரு சமயம் என் கடைசிப் பெண் சச்சியுடன் ரமணா சண்டை போட்டு, அவளைப் பலமாக அடித்து விட்டான். சச்சி அழுது



கொண்டே என்னிடம் வந்தபோது எனக்குக் கோபம் வந்துவிட்டது. ''சின்னக் குழந்தையைப் போட்டு இப்படி அடிச்சிருக்கியே!'' என்று கோபத்துடன் ரமணாவைப் பார்த்துக் கத்தினேன். ''எங்காவது கண் காணாமல் போய்த் தொலை'' என்று திட்டி விட்டேன்.

சச்சியைச் சமாதானம் செய்து விட்டுத் திரும்பிப் பார்த்தால் ரமணாவைக் காணோம்! வீடு முழுக்கத் தேடினோம்; அக்கம் பக்கங்களிலெல்லாம் விசாரித்தோம். ஊஹும்! ரமணாவைப் பார்த்ததாக யாருமே சொல்லவில்லை. நேரம் மட்டும் ஓடிக் கழிந்தது. போலீஸில் புகார் கொடுக்கலாமா வேண்டாமா என்ற யோசனையும் குழப்பமுமாக நான் கலங்கிப் போய் உட்கார்ந்திருந்த அந்திப் பொழுதில்....

ரமணா வந்து சேர்ந்தான்! காலையில் அணிந்து சென்ற வெள்ளை உடை அழுக்கிலே புரண்டெழுந்த அடையாளங்களுடன்.... முகத்திலே சோர்வு, ஆனால் கண்களில் மட்டும் எப்போதும் மின்னும் வைராக்கியம். அவனுக்குப் பின்னால் ஒரு சின்ன படையாக, பக்கத்திலிருந்த குடிசை வாழ் சிறுவர்கள் கூட்டம்! எல்லோரும் அவன் வயதொத்தவர்கள்.

எனக்குக் கோபம் ஒரு புறம் ஆறுதல் மறுபுறம். கோபத்தைப் பின்னுக்குத் தள்ளி விட்டு, சாதாரணமாகக் கேட்பது போல் கேட்டேன்.

''எங்கே போயிருந்தே....?''

''நீதான் என்னைப் 'போய்த் தொலை'ன்னு திட்டினியே... அதான் போய்ட்டேன்'' என்றான் மிகச் சாதாரணமாக.

நாள் முழுக்க எங்கெங்கோ ஊர் சுற்றி விட்டுத் திரும்பியிருந்தான்!

குழந்தைகளிடம் எவ்வளவு ஜாக்கிரதையாகப் பேச வேண்டும் என்பதை அந்தச் சம்பவம் உணர்த்தியது. அதிலும் ரமணா மிகவும் மென்மையான உள்ளம் படைத்தவன். ஒரு முறை, சென்னை தி.நகர் கல்யாண மண்டபம் ஒன்றின் வாசலில் இருந்த குப்பைத் தொட்டியருகே, எச்சில் இலைகளிலிருந்து உணவை எடுத்துச் சாப்பிடும் கூட்டத்தைப் பார்த்துவிட்டு மனமொடிந்து போனான். இந்தியாவின் ஏழைமை அவனை ரொம்பவும் பாதித்தது. இதன் காரணமாகவே அவன் மேல் நாட்டுக்குப் போய் விட்டான்.

ரமணா வெளிநாடு செல்வதற்குக் கூறிய காரணம் என்னைத் திடுக்கிடச் செய்தது. 'உன்னை அந்தப் பிரச்னை பாதிக்கிறது எனில் அதைக் கண்டு ஓடுவதில் என்ன பயன்? நீ இங்கேயே இருந்து அந்த நிலைமையை எதிர்த்துப் போராடி வெற்றி பெற அல்லவா முயற்சி செய்ய வேண்டும்?' என்று அவனிடம் எடுத்துச் சொல்லிப் பார்த்தேன்.

ஆனால் ரமணாவுக்கு நான் சொன்னதில் உடன்பாடு ஏற்படவில்லை. அவன் விருப்பத்தை மதித்து அவன் அயல்நாடு சென்று படிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொடுத்தேன். அவனும் புறப்படும் போது, 'ஒரு நாள் இந்தியாவுக்கு நிரந்தரமாகத் திரும்பி விடுவேன்' என்று சொல்லி விட்டுப் போனான்.

அங்கே போனவன், இண்டஸ்டிரியல் இஞ்சினியரிங் படித்து முடித்துவிட்டு, பின்னர் வீடியோ பிசினஸ் ஆரம்பித்து, வெற்றிகரமாய் நடத்தினான். சமீப காலமாய் அமெரிக்காவில், வீடியோவை விட, தியேட்டரில் சினிமா பார்க்கவே மக்களிடையே ஆர்வம் அதிகரித்ததன் விளைவாய், வீடியோத் துறையைத் துறந்து கார், ஆட்டோ பார்ட்ஸ் பிசினஸில் ஈடுபட்டுள்ளான்.

1978 ஏப்ரல் 8 ம் தேதி, அமெரிக்காவிலிருந்து எனக்கு ஒரு போன். பேசியது என் மகன்தான். ''மம்மி,எனக்கு உங்கள் ஆசீர்வாதம் தேவை'' என்ற அவனை நான் கேட்டேன், ''ஏதாவது புது பிசினஸ் ஆரம்பிக்கப் போகிறாயா?'' ஆனால் அவன் பதில் எனக்குப் பெரிய அதிர்ச்சியை அளித்தது.

(தொடரும்)

* தேவிப்ரசாத், வைஷ்ணவியுடன்

சௌகார் ஜானகி

# நடமாடும் தெய்வம்
# காஞ்சி காமகோடி மகானின் நூற்றாண்டில்
# HMVயின் இசை காணிக்கை



திருமதி **M.S. சுப்புலட்சுமி**
தமிழ், சமஸ்கிருதம், இந்தி
மொழிகளில் பாடியுள்ள,
**மகானின்** புகழ்பாடும்
பாடல்கள் அடங்கிய
**"சதாப்தி சமர்ப்பண்"**
என்ற கேசட்டை

**திரு R.P. கோயங்கா**
அவர்கள்
(சேர்மன், RPG
எண்டர்ப்ரைஸஸ்)
நடமாடும் தெய்வத்தின்
பொற்பாதங்களில்
காணிக்கையாக சமர்ப்பித்தார்.

**ஸ்ரீஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள்**
இந்த கேசட்டை தன்
திருவருட் கரங்களால்
*25.5.93* அன்று
காலை *10.30* மணிக்கு
காஞ்சிபுரம் ஸ்ரீ சங்கரமடத்தில்
வெளியிட



**திரு. R. வெங்கட்ராமன்**
அவர்கள்
(முன்னாள் ஜனாதிபதி)
பெற்றுக்கொண்டார்.

எல்லா **HMV** ஆடியோ கேசட் விற்பனையாளர்களிடமும் கிடைக்கும்.

(TPHVS 32991 விலை: ரூ. **29/-**)







CCC\HMV\TM\1045

## அடுத்த இதழ்...



# கர்நாடக மாநிலச் சிறப்பிதழ்

- ஜெலுஸில் கேட்கும் பயணக் கட்டுரை
- கன்னட மொழிச் சிறுகதை
- பெண் எழுத்தாளர் பேட்டி
- வியக்க வைக்கும் நவீன நாடகம்
- ஒலிம்பிக் போட்டிக்குத் தயாராகும் சிறுவர்கள்
- பெங்களூரின் தூய்மை பராமரிக்கப்படுவது எப்படி?
- பெங்களூரில் ஒரு பெண்ணுரிமை இயக்கம்
- 'கன்னடத்துப் பைங்கிளி' - சந்திப்பு
- தொழில் வளர்ச்சி, சுற்றுலா வளர்ச்சி பற்றி அமைச்சர்களின் பேட்டிகள் மற்றும் முதல்வர் பேட்டி
- மொய்லி பற்றி ஹெக்டே
- இன்னும் ஏராளச் செய்திகள்!



நளினி சாஸ்திரி எழுதும்

# ஆத்மாவுக்கு ஆபத்து

**பரிசு பெற்ற தொடர்கதை ஆரம்பம்**

# ஆளுக்கு ஆறுமாசம் மந்திரி பதவி தந்தால் என்ன?

● குரு. சந்தானம், சென்னை.

? நடந்து முடிந்த இடைத் தேர்தல் முடிவுகள் உண்மையில் மக்களின் மனக் கண்ணாடி தானா?

! அப்படி சொல்வதற்கில்லை. உதாரண மாக, ஆந்திரப் பிரதேசத்தில் தெலுங்கு தேசம் பெற்ற வெற்றிகள் அதற்கான ஆதரவு வோட்டினால் அல்ல; காங்கிரஸ் எதிர்ப்பு வோட்டுக்கள் என்றும் கருத முடியாது. காங் கிரஸில் தேர்தல் டிக்கெட் கிடைக்காதவர் கள் அதிகாரபூர்வமான வேட்பாளரை எதிர்த்து வேலை செய்யப் போக, தெலுங்கு தேசத்துக்குக் கொண்டாட்டமாகி விட்டது. தமிழ்நாடு காங்கிரஸில் ஏற்பட்டுள்ள ஆரோக்கியமான மாற்றம், மத்தியப் பிரதே சத்தில் அர்ஜுன் சிங், சீதாராமகேசரி, சித் தியா, சுக்லா ஆகியோர் ஒரே மேடையில் ஒருங்கிணைந்தது ஆகியவற்றைப் பார்த் தேனும் இதர மாநில காங்கிரஸ்காரர்கள் விழித்துக் கொண்டால் நல்லது.

● அ. சண்முகசுந்தரம், சிட்லபாக்கம்.

? காமராஜரின் "ஆகட்டும் பார்க்கலாம்" என்பதற்கும் நரசிம்மராவின் "உரிய நேரத் தில் கவனிக்கப்படும்" என்பதற்கும் என்ன வித்தியாசம்?

! அது அணைத்துக் கொண்டு போகும் சாமர்த்தியம்; இது உதறித் தள்ளுகிற பரி தாபம்.

● ஆர். விஜி, அரகண்டநல்லூர்.

? அடக்கத்துக்குக் கிடைத்து விட்டதே, பரிசு?

! பரிசா, தண்டனையா என்பதைப் பொறுத் திருந்துதான் பார்க்க வேண்டும். துறை அப் படி! சிக்கலானது.

● ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? தமிழக உள்ளாட்சி அமைப்புக்கள் ரூ 10 கோடி சுருட்டியுள்ளது குறித்து...?

! டபுள் மோசடி. வரு மான வரி கழிப்பதாக கான்ட்ராக்டர்களை ஏமாற்றி விட்டார்கள். அவ்வாறு பிடிக்கப்பட்ட தொகையை வருமான வரி இலாக்காவுக்குச் செலுத்தாமல் அவர் களுக்கும் நாமம் போட் டார்கள். என்ன செய்ய, உச்சந்தலை முதல் உள் ளங்கால் வரை ஆட்சியில் ஒரே ஊழல்மயம்!

● ரா. நாச்சிமுத்து, போடிநாயக்கனூர்.

? "ஊழல் குற்றச்சாட்டுக்காக ஜெ அரசை நீக்குவதென்றால் இந்தியாவில் எந்த அரசும் மிஞ்சாது" என்று பொதுவுடைமைக் கட்சித் தலைவர் தா. பாண்டியன் கூறுகிறாரே?

! அதனால்தான் புலிகள் தப்பிய விஷயத் தையும் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள் போல!

● கு. சி. ரவிசந்திரன், மேட்டூர் அணை ❒

? போலீஸ் நெருங்க முடியாத வீரப்பனைப் பத்திரிகைகள் மக்களுக்கு வெளிச்சம் போட் டுக் காட்டுவது காவல் துறையின் திறமையின் மையைச் சுட்டுமா?

! அப்படியல்ல. பிரபாகரன் கூட தன்னைப் பற்றி எழுதப்பட வேண்டும் என்பதற்காகப் பத்திரிகைப் பிரதிநிதிகளை அருகில் அனு மதித்தான். புகழாசைதான் காரணம். பேனா திருபருக்கு அளிக்கும் வரவேற்பை வீரப்பன், துப்பாக்கி பிடித்த போலீஸுக்கு வழங்க முடியுமா என்ன!

● உஷா கோபு, பட்டுக்கோட்டை.

? நான்கு மாவட்டங்களில் வெள்ளிக் கிழமை யைக் கேரள அரசு விடுமுறை நாளாக அறி வித்திருப்பது முஸ்லிம்களின் வோட்டுக் களைப் பெறவே என்று பாரதிய ஜனதா கூறி யுள்ளதே?

! இருக்கலாம். ஆனால் எனக்கென்னவோ பாரதம் முழுவதுமே இந்த வெள்ளிக் கிழமை விடுமுறை என்ற நியதியைக் கடைப்பிடிக்கலாம் என்று தோன்றுகிறது. ஞாயிறு விடுமுறை என்பது வெள்ளையர் ஆட்சியில் ஏற்பட்டது. ஹிந்துக்களுக்கும் வெள்ளிதான் முக்கியம். வெள்ளி விடு முறை விட்டாலாவது இவர்கள் கோயிலுக் குப் போவார்களா அல்லது ஒலியும் ஒளியும் தான் பார்ப்பார்களா என்பதற்கு ஒரு கருத்துக் கணிப்பு தேவை!

● இ. மணிமொழி, நெய் வேலி.

? எல்லாரையும் திருப்திப் படுத்த ஆளுக்கு ஆறு மாசம் மந்திரி பதவி என்று தீர் மானித்து விட்டால் என்ன?

! ஆகா! தாராளமாகச் செய்யலாம்; இப்போதைக்கு



* "ஆகட்டும் பார்க்கலாம்"



* "உரிய நேரத்தில்..."



* பரிசா, தண்டனையா?

அப்போது ஒன்றும் குறைந்து போய் விடாது!

● இரணியில் கலை, இரணியல்.

**? ராமசாமியை விட அதிகம் டாம்பீகச் செலவு செய்து கொண்டிருப்பவர்கள், அதிகார துஷ்பிரயோகம் செய்து கொண்டிருப்பவர்கள், லஞ்ச ஊழலில் ஈடுபட்டிருப்பவர்கள் எல்லாரும் சட்டத்தின் பிடியிலிருந்து தப்பித்துக் கொண்டிருக்கிறார்களே, அவர்களையெல்லாம் பதவியிலிருந்து ஓட்ட வேண்டாமா?**

! நிச்சயம் ஓட்ட வேண்டும். அதற்காகவே தான் ராமசாமி கண்டிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது. கண்டனத் தீர்மானம் காங்கிரஸின் ஆதரவையும் பெற்று நிறைவேறியிருந்தால் எவ்வளவு ஆரோக்கியமான சூழல் உருவாகியிருக்கும், எண்ணிப் பாருங்கள். தவறு செய்தால் அவமானப்பட நேரும் என்பதைப் புரிந்து கொண்டு எல்லா நீதிபதிகளும் கண்ணியம் காப்பார்கள். அதே சமயம் அரசியல்வாதிகள் மீது தொடுக்கப்படும் வழக்குகளில் படு கண்டிப்பாகவும் இருப்பார்கள். அதனால் அரசியல்வாதிகளும் அதிகாரிகளும் பயப்படுவார்கள். இது மனோதத்துவம். இப்போதென்ன? மூன்று நீதிபதிகள் சேர்ந்து குற்றம் நடந்திருப்பதாகத் தீர்ப்பு வழங்கிய பிறகும் கண்டனத் தீர்மானத்திலிருந்து ராமசாமி தப்ப முடியும் என்றால் இதர நீதிபதிகளின் மனநிலை என்னவாக இருக்கும்? அந்த மனநிலையைப் புரிந்து கொண்ட அரசியல்வாதிகளுக்கும் அதிகாரிகளுக்கும் மேன்மேலும் அதிகார துஷ்பிரயோகம் செய்யவும் லஞ்ச லாவண்யங்களில் ஈடுபடவும் துணிவு வருமா வராதா? யோசியுங்கள்.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

**? 'முதல்வரின் சொல்லே வேதம்' என்று அமைச்சர் பட்டாபிராமன் கூறியுள்ளது பற்றி...?**

! சே! இதெல்லாம் ரொம்ப ஓல்ட். புதிதாக வந்திருப்பவர்கள் புதிய புதிய புகழ் மொழிகளைப் புகுத்த வேண்டாமோ! கொஞ்சம் மூளையைக் கசக்கிக் கொள்ளட்டும்!

● ஆர். ஆர். குமார், ஓசூர்.

**? போலீஸார் சுட்டுக் கொன்றதாகக் கூறப்பட்ட வீரப்பன் ஆட்களின் உடல்களைக் காணவில்லையாமே? கொன்றது நிஜம் தானா?**

! 'சும்மா உஷ்வாகாட்டிக்கு தேவாரம் பிலிம் காட்டியிருக்கிறார்' என்று கர்நாடகப் பத்திரிகையாளர்களும் சில அரசியல்வாதிகளும் மறுநாளே பேசவும் எழுதவும் செய்தார்கள். இப்போது மரத்தின் மீதிருந்த சில வீரப்பன் ஆட்களைக் கர்நாடக போலீஸ் சுட்டுத் தள்ளி விட்டதாக மார்தட்டிக் கொள்ளப் போக, அவர்கள் வீரப்பன் ஆட்களே இல்லை, ஆதிவாசிகள் என்று தெரியவந்து கர்நாடகம் அசடு வழிகிறது. இதற்கிடையில் தமிழக, கர்நாடக போலீஸார் பலர் வீரப்பனின் கண்ணி வெடிகளுக்கு அநியாயமாகப் பலியாகி வருகிறார்கள். போதிய பயிற்சியோ, நவீன ஆயுதங்களோ இல்லாத நிலையில் எதற்கு இந்த வீண் ஜம்பம்? பேசாமல் ராணுவத்திடம் பொறுப்பை ஒப்படைக்க வேண்டியது தானே!



✱ இவரைவிட அதிகமாக...

● லவ்லி பால கிருஷ்ணன், மதுரை.

**? ரேஷனுக்கு வருமான வரம்பு வருவதால் மக்களுக்குப் பயன் அதிகமா? அரசுக்குப் பயன் அதிகமா?**

! வருமான வரம்புக்கும் அதிகமாக மாதச் சம்பளம் வாங்குவோருக்கு மட்டுமே நஷ்டம் ஏற்படும். மாதச் சம்பளம் அல்லாதவர்கள் பொய்யோ, நிஜமோ வருமானச் சான்றிதழ் வழங்க வேண்டி வரும். அப்போது அதை வழங்கப் போகும் அதிகாரிகளுக்கு எக்கச்சக்கமாகப் 'பயன்' உண்டாகும். அரசுக்கு லாபம் அற்ப சொற்பமாகவே இருக்கும். எனவே இது போன்ற யோசனைகள் போகாத ஊருக்கு வழி சொல்வது போல்தான்.



✱ ரொம்ப ஓல்ட்!



✱ பிலிம் காட்டினார்?

● என். ஆறுமுகம், பரமக்குடி.

**? "அந்தக் காலத்தில் எட்டு மந்திரிகளை வைத்துக் கொண்டு காமராஜர் நிர்வாகம் நடத்தினாரே" என்று வாழப்பாடி இன்று கேட்பது பொருந்துமா?**



✱ எட்டுபேர் மட்டுமே...

! பொருந்தும்; (ஒருவேளை) 'காங்கிரஸ் ஆட்சிக்கு வந்தால் மந்திரி சபையில் எட்டு பேர் மட்டுமே இருப்பார்கள்' என்று வாழப்பாடி உறுதிமொழி அளிப்பாரேயானால்!

> ❒ ரூ 25 பரிசு பெறுபவர் :
> கு. சி. ரவிச்சந்திரன்,
> 36/25, கூடுவீதி,
> தங்கமாபுரிபட்டணம்,
> மேட்டூர் அணை - 636 402.

# வட்டமேஜை

◆ சங்கராச்சார்ய மகா சுவாமிகளை நேரில் கண்ட உணர்வை அட்டைப்படம் ஏற்படுத்தியது; நூற்றாண்டு விழாவில் கலந்து கொள்ள முடியாமல் போனவர்களுக்கு நேரில் தரிசித்த உணர்வை ஏற்படுத்தியது. திருவையாறில் வசித்தால் முக்தி; திருவாரூரில் பிறந்தால் முக்தி; காசியில் இறந்தால் முக்தி; அது போல் இவ்வார கல்கி படித்தவர்களுக்கும் முக்தி நிச்சயம் என்று அடித்துக் கூறுவேன்.

சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

◆ பெரியவாளை முழுமையாக முதல் பக்கத்திலிருந்து கடைசிப் பக்கங்கள் வரை மனம் குளிரத் தரிசிக்க வழி செய்த கல்கியை எப்படி பாராட்டுவதென்றே தெரியவில்லை!

சேலம் - 9, மு. இரவிச்சந்திரன்.

## அருட் பார்வையோ... அட்டைப்படமோ...

◆ எங்கிருந்தாலும் ஆட்கொள்ளும் அருட்பார்வையை அட்டையில் கண்டு வணங்கி ஆனந்தம் கொண்டேன்.

பொள்ளாச்சி, என். சீத்தாலட்சுமி.




◆ நடமாடும் தெய்வம் காஞ்சி பெரியவர் அவர்களை நான் நேரில் சந்திக்கும் பாக்கியம் கிடைக்கவில்லை. இந்த வாரம் கல்கி மூலம் நேரில் சந்தித்த மாதிரி பாக்கியம் கிடைத்தது. மனம் குளிர வணங்கினேன்.

திருச்சி - 6, சே. முத்துக்கருப்பன்.

◆ 'அவதார தினம்' என்ற குறிப்பு 'அமரபாரதி' இதழில் இடம் பெற்றது. ரா. கணபதி எழுதிய அதனை 'காமகோடி'யில் இடம் பெற்றதாகக் குறிப்பிட்டுள்ளீர்களே!

சென்னை - 33, மங்களம்.

(தவறுக்கு வருந்துகிறோம் - ஆர்.)

◆ 'சங்கரரின் சீடர்கள்' என்ற கட்டுரையின் கடைசியில், ''இந்த ஆதி குருவின் குரு யார்!... அவர் பெயர் கௌடபாதாச் சார்யார்'' என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆதிசங்கரரின் குரு ஸ்ரீ கோவிந்தபகவத் பாதாள்.

சென்னை - 33, என்.எஸ். தியாகராஜ சர்மா.

◆ 'ராஜிநாமா செய்தார் ராமசாமி; அசடு வழிகிறது காங்கிரஸ்' என்ற தலையங்கம் அட்சர லட்சம் பெறும். இதை எல்லா மொழியிலும் அல்லது ஆங்கிலத்தில் மட்டுமாவது மொழிபெயர்த்து, எல்லா எம்.பிக்களுக்கும் விநியோகம் செய்ய வேண்டும்.

திருச்சி - 19, பி.வி. குப்புசாமி.

◆ தமிழனின் மானத்தை டெல்லியில் அடகு வைத்து விட்ட நீதிபதி இராமசாமி ஒரு தமிழர் என்பதால் அவரை ஆதரிக்க வேண்டும் என்று சொன்னார் கருணாநிதி. கண்டனத் தீர்மானம் காங்கிரஸால் தோல்வியடைந்த பின், 'நேர்மையாகத் தங்கள் கடமையைச் செய்கின்ற நீதிபதிகளைத் தடுக்கும் சில தீய சக்திகளின் முயற்சி தோல்வியடைந்து விட்டது', என்று கூறிய இராமசாமி, தாம் ஒரு நீதிபதியாக இருப்பதைக் காட்டிலும் அரசியல்வாதியாக இருப்பதற்குத்தான் லாயக்கானவர் என்று நிரூபித்திருக்கிறார். பேசாமல் அவர் கருணாநிதியுடன் சேர்ந்து அரசியல்வாதியாகி விடலாம். கல்கி என்றுமே நடுநிலை தவறித் தலையங்கம் தீட்டியதில்லை என்பதை இந்த தலையங்கமும் நிரூபிக்கிறது.

திருப்பூர், கே. மணிகண்டன்.

◆ நான்கே வார்த்தைகளில் ஒரு க்ளைமாக்ஸைக் கொண்டு வந்து, நடமாடும் தெய்வத்தின் கருணையைத் 'தேடல்' சிறுகதையில் தெளிவாய் உணர்த்தியிருக்கும் சுஜாதாவுக்குப் பாராட்டுக்கள்.

குஞ்சரம், பா. சிவகுமார்.

◆ வீராணம் திட்டத்துக்கு உலகளாவிய டெண்டர் கோரும் ஜெயலலிதா கார்ட்டூனும், 'சென்னை நகரில் எப்போது குடிநீர்ப் பிரச்னை தீரும்?' என்ற கேள்விக்கான தராசுவின் பதிலும் மாஸ்டர் பீஸ்கள்!

மொரட்டுப்பாளையம்,
இராஜேஸ்வரன்.

◆ ராஜகுமாரனின் 'அம்மாவை எப்படிச் சமாளிக்க' சிறுகதை, 'தலைமுறை இடைவெளி'க்குச் சிறந்த மனோதத்துவ மருந்து!

புலிவலம், ஆர். பரிமளா.

◆ ''சந்திரசேகர க்ருபாநிதே!'' எனும் பாடலை வெளியிட்டதற்கு நன்றி. பாடலைப் பாட விரும்புவோருடைய நலனைக் கருதி சில திருத்தங்கள் :

சரணம் 1ல் - உந்தன் திருவடி மலரிணைத்
துணையென...

சரணம் 3-ல் மூவா மருந்தாய்க் காக்கின்றாய்
கன்றுக்கு
ஆவாய் அன்னையாய்

சென்னை - 85, கே. ஆர். ஆத்மநாதன்.

பாரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பாரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

BOMBAY DYEING



ESTABLISHED 1879

# எடுப்பான உடை மிடுக்கான தோற்றம்!






பாம்பே டையிங் பாலியெஸ்டர் கலந்த பள்ளிச் சீருடை ரகங்கள் ஆண்டு முழுவதும் முன்னணியில் பள்ளிச் சீருடைகளிலும்.

■ பாலியெஸ்டர் காட்டன் ஷர்டிங்குகள் / சூட்டிங்குகள். ■ காட்டன் ஷர்டிங்குகள் / சூட்டிங்குகள். ■ ஸ்கூல் பேகுகள் ■ ஸாக்ஸுகள் ■ டைகள்

உயர்ந்த தரம் உகந்த விலை

தமிழ்நாடு, பாண்டிச்சேரி, கேரளம், வளைகுடா நாடுகள், மொரிஷியஸ் மற்றும் இலங்கையில் உள்ள 130க்கு மேற்பட்ட ஷோரூம்களிலும் 600க்கு மேற்பட்ட அங்கீகரிக்கப்பட்ட டீலர்களிடமும் கிடைக்கும்.

பள்ளிச் சீருடை வாங்கும் பொழுது 5% தள்ளுபடி கூப்பனை பயன்படுத்துங்கள்.
இச்சலுகை தமிழ்நாடு, பாண்டிச்சேரி மற்றும் கேரளத்தில் மட்டுமே.

**BOMBAY DYEING**
UNIFORM PRIVILEGE COUPON
5% Special Discount
From 1.4.93 to 30.6.93.

விநியோகஸ்தர்கள்
சிவ்ராம்ஸ் அஸோஸியேட்ஸ்
கோவை-11 சென்னை - 17.
Bankers : The Federal Bank Ltd.,

REGISTERED No. M. 4302
Registered as Newspaper in Sri Lanka

# சில குழந்தைகள் மற்றவர்களை விடத் துறுதுறுவென இருப்பது ஏன்?

துறுதுறுவென இருப்பதற்குத் தேவையான சக்தியைப் பெறுவதற்கு, உங்கள் குழந்தைக்குச் 'சரியான' கலோரிகள் தேவை. புரோட்டீன்களும், காபோஹைட்ரேட்டுகளும், கொழுப்புச் சத்தும் சரியான சமச்சீர் விகிதத்தில் கலந்திருந்தால்தான் இந்தக் கலோரிகள் கிடைக்கும்.

இந்தச் 'சரியான' கலோரிகள் கிடைக்க வேண்டுமானால் அதற்குச் சிறந்த வழி ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவைக் கொடுக்க வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார். உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆன பிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு வேளையும், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவை உங்கள் குழந்தைக்குத் தர வேண்டும்.

பெரும்பாலான தாய்மார்களுக்கு இது முடிவதில்லை. வழக்கமான உணவு வகைகள் சரிப்பட்டு வருவதில்லை.

பிறகு என்னதான் வழி ?

செரிலாக். ஏனெனில் புரோட்டீன்கள் செறிந்துள்ள பால், கோதுமை இரண்டுமே இதில் உள்ளன. மேலும், காபோஹைட்ரேட்டுகள், கொழுப்புச் சத்து, மினரல்கள், இரும்புச் சத்து, கால்ஷியம் ஆகியன சரியான அளவில் கலந்த உணவு செரிலாக். வைட்டமின்கள் A, D, E, B-காம்ப்ளெக்ஸ் மற்றும் C இதற்குப் பலம் சேர்க்கின்றன. ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு செரிலாக்.

இன்னுமொரு சிறப்பு, செரிலாக் இப்போது நெஸ்லேயின் புரட்சிகரமான புதிய Z-டைன் என்ஸைமேட்டிக் முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகின்றன. செரிலாக் மிக எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் செரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு கலோரிகள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை துறுதுறுவென இருப்பதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு இது.






**உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்**

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பாலே மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.